ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருவாய்மொழி ஒன்பது மற்றும் பத்தாம் பத்துக்கள்

அவைகட்குரிய

# ப்ரதிபிம்பலஹரீ

[ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பு – ஶ்லோக வடிவில்]



"குடந்தை எங்கோவலன் குடியடியார்க்கே"


வெளியிடுபவர்:-

ஸ்ரீ நடாதூர் அம்மாள் டிரஸ்டு,

"ஸ்ரீநிதி", 10, பாரதியார் தெரு, சிவகாமி நகர், கௌரிவாக்கம். சென்னை - 600 073.

ப்லவ வர்ஷம், ஆடி, ம்ருகசீர்ஷம் ( 04 - 08 - 2021 )



ஸ்ரீருக்மிணீ ஸத்யபாமா ஸமேத ஸ்ரீ கோவர்தநேசன்
- திருவடமதுரை



ஸ்ரீ மலர்மகள் நாச்சியார் ஸமேத ஸ்ரீ காய்ச்சினிவேந்தன்
- திருப்புளிங்குடி



ஸ்ரீ வரகுணவல்லி ஸமேத ஸ்ரீ விஜயாசனர்
- திருவரகுணமங்கை



ஸ்ரீ வைகுந்தவல்லி ஸமேத ஸ்ரீ கள்ளபிரான்
- திருவைகுந்தம்

|| श्रीः ||



|| श्रीमते रामानुजाय नमः ||

# திருவாய்மொழி

## ஒன்பது மற்றும் பத்தாம் பத்துக்கள்

அதற்குரிய

# ப்ரதிபிம்பலஹரீ

[ஸம்ஸ்க்ருத மொழிபெயர்ப்பு – *ஶ்*லோகவடிவில்]


ஸ்ரீமதுபயவே. மஹாவித்வான். வில்லூர் நடாதூர் ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸனாதிபதி.
ஸாஹித்ய வ்யாகரண வாசஸ்பதி.

**வேங்கடஶேஷார்யமஹாதேசிகஸ்வாமி**

அருளிச்செய்தது.

கௌரவப் பதிப்பாசிரியர்:

*வில்லூர் நடாதூர் ஶாஸ்த்ர ஸாஹிதீவல்லப ராஷ்ட்ரபதி ஸம்மானித*

**Dr. V.S. கருணாகரன்,** B.E.,(Mech.), M.A.(Sanskrit), Ph.D.,

(ஆஸ்தான வித்வான், ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஆஶ்ரமம்)



வெளியிடுபவர்:

**ஸ்ரீ நடாதூர் அம்மாள் டிரஸ்டு,**

“ஸ்ரீநிதி”, 10, பாரதியார் தெரு, சிவகாமி நகர், கௌரிவாக்கம், சென்னை - 600 073.

**ப்லவ வர்ஷம், ஆடி, ம்ருக*ஶீ*ர்ஷம், (04-08-2021)**

।। श्रीः ।।



।। श्रीमते रामानुजाय नमः ।।

।। श्रीमते वात्स्यश्रीवेङ्कटशेषार्यमहादेशिकाय नमः ।।

।। श्रीमते वात्स्य (श्रीनिधये) श्रीनिवासराघवार्यमहादेशिकाय नमः ।।

# பதிப்பாசிரியனின் பணிவான விண்ணப்பம்

## 1. இந்த நாள் !

*இந்தப் புத்தகத்தை அடியேன் வெளியிடும்* **இந்த நன்னாளே அடியேனுடைய வாழ்வின் பொன்னாள்.** *உண்மையிலேயே இன்று தான் அடியேன் பிறவிப் பயனைப் பெற்றுள்ளேன் என்றால் அது மிகையே ஆகாது.*

*இந்தப் புத்தகத்தில் திருவாய்மொழியின் ஒன்பதாவது மற்றும் பத்தாவது பத்துக்களுக்கான ஸம்ஸ்க்ருத ஶ்லோக வடிவ மொழி பெயர்ப்பாக அடியேன் ப்ராசார்யரும் பிதாமஹரும் ஆன ஸ்ரீமதுபயவே. மஹாவித்வான். வில்லூர் நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனாதிபதி.* **ஸாஹித்ய வ்யாகரண வாசஸ்பதி. ஸ்ரீவேங்கட ஶேஷார்ய மஹாதேஶிகஸ்வாமி** *அருளிச்செய்துள்ள* **ப்ரதிபிம்பலஹரீ** *அச்சிலே வெளியிடப்படுகின்றது.*

*இதற்கு முன் 1986-ல் முதல் பத்தும், 1996-ல் இரண்டாம் பத்து முதல் ஐந்தாம் பத்து வரையும், 2007-ல் ஆறாம் பத்தும், 2014-ல் ஏழாம் பத்தும், 2017-ல் எட்டாம் பத்தும், இப்பொழுது 2021-ல் ஒன்பதாம் மற்றும் பத்தாம் பத்தும் என ஆறு ஸஞ்சிகைகளாக வெளிவந்து இந்த நூலின் வெளியீடு* **நிறைவு** *அடைந்துள்ளது.*

*அதாவது இவ்வெளியீட்டுப் பணி முப்பத்தைந்து ஆண்டுகளில் நிறைவேறியுள்ளது.* ***த்ரீணி வாவ ரேதாகும்ஸி பிதா புத்ர: பௌத்ர:*** *என்று வேதபுருஷன் அருளியபடி இது மூன்று தலைமுறைகளில் நடந்திருக்கிறது. நல்லவேளை! எம்பெருமான் இதனை நாலாம் தலைமுறைக்குக் கொண்டு செல்லத் திருவுள்ளம் பற்றிடவில்லை.*

## 2. ப்ரதிபிம்பலஹரீ வெளியீடும், அதனில் ஏற்பட்ட தாமதத்தின் பின்னணியும்

*இந்தப் ப்ரதிபிம்பலஹரீயைப் பிதாமஹர் தமது வாழ்நாளில் எந்த கட்டத்திலே நிறைவு செய்தருளினார் என்று அடியேனுக்குத் தெரியவில்லை. 1855-ல் அவதரித்தருளிய பிதாமஹர் 1934-ல் திருநாட்டுக்கு எழுந்தருளினார். ஆனால் அவருடைய வாழ்நாளில் கடைசிப் பத்து*

*ஆண்டுகள் பொருளாதார நெருக்கடியில் அவர் மிகவும் ஶ்ரமப்பட்டிருக்கிறார் என்று அடியேனுக்குத் தோன்றுகின்றது. தம்முடைய ஆசார்யனுடைய* ***தத்வஸாரம்*** *மற்றும்* ***அதிகரணஸாராவலீ*** *இவைகளுடைய வ்யாக்யானங்களை அச்சிட்டு வெளியிட்டதாலேயே அவர் இந்தப் பொருளாதார நெருக்கடிக்குத் தள்ளப்பட்டாரோ என்று கூடச் சில பல புத்தகங்களை அச்சிட்டு வெளியிட்ட அனுபவத்தால் அடியேனுக்குச் ஐயம் எழுவது உண்டு. எனவே அவர் தம் வாழ்நாளிலே இதனை அச்சிட்டு வெளியிடத் துணியவில்லையோ என்று கூடத் தோன்றுகின்றது.*

*பிதாமஹர் தமது மணியான க்ரந்தலிபிக் கையெழுத்திலே விட்டுச் சென்ற ப்ரதியைத் திருத்தகப்பனார் தமது பல நெருக்கடிக்களிலும் பாதுகாத்து வந்தார் என்றாலும் அவருடைய இயற்கையான கவிதைத்திறன், படைப்புத் திறன் என்ற இவைகள் அவரைப் பல புதிய கவிதைகளைப் படைக்கத் தூண்டி வந்த நிலையில் இதன் வெளியீடு தாமதமாகிக் கொண்டே வந்தது.*

*ஆனாலும் பித்ரு பக்தியே வடிவெடுத்தவரான அடியேனுடைய திருத்தகப்பனார் அடியேனையும் ஒரு பொருளாக்கி உரிய கல்வியையும் அளித்தருளினார். அது மட்டுமல்ல, இந்தப் பணியிலே ஈடுபாட்டையும் உண்டாக்கி அருளினார். அடியேனுக்குத் திருமாளிகைப் பெருமாளான ஶ்ரீஸுவர்ண லக்ஷ்மீதர நவநீதநடன் திருவடியிலே ஶரணாகதி செய்து வைத்து விட்டு அடியேனிடம் அவர் கனிவுடன் ஸாதித்தார்:- ''எம்பெருமானே ! இவன் அடியேனும் அடியேன் திருத்தகப்பனாரும் பட்டது போலப் பொருளாதர நெருக்கடி ஏதும் படாது இவ்வுலகிலும் வளமான வாழ்க்கையையும் வாழ்ந்து பகவத் பாகவத கைங்கர்யம் செய்து வரும்படி அருளிட வேண்டும் என்று எம்பெருமானிடம் ப்ரார்த்தனை செய்திருக்கிறேன்'' என்று.*

*இதன் பயனாக அடியேனுக்கு இவ்வுலக வாழ்க்கையில் பொருளாதார நெருக்கடி இல்லாத வளமான வாழ்க்கையை எம்பெருமான் அமைத்து அருளியுள்ளான் என்பதில் ஐயமில்லை. 2007-ல் அடியேன் மத்திய அரசுப் பணியில் இருந்து ஓய்வு பெற்றேன். ஓய்வூதியம் தொகை அளவில் பணிக்காலத் தொகையை விட அதிகம் என்பதால் பொருளாதார நெருக்கடி இல்லாத ஓய்வு வாழ்க்கை வளம் ஆகவே உள்ளது. இப்புத்தகத்தை அச்சிட வேண்டிய நிதி தர அன்பு நண்பர்களும் கிடைத்திருக்கின்றனர். அப்படி இருந்தும் ஏன் இந்த முப்பத்தைந்து ஆண்டுகள் ?*

*திருத்தகப்பனார் தாம் எழுந்தருளியிருந்த காலத்திலேயே முதல் ஐந்துப் பத்துக்களை அடியேனைக் கொண்டே வெளியிட்டார். இப்பணியில் பலவகைகளில் அடியேனை திருத்திப் பணிகொண்ட திருத்தகப்பனார் 2001-ல் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளி விட்டார்.*

*அதன் பிறகு பிதாமஹரின் க்ரந்தலிபிக் கையெழுத்தை தேவநாகரீ லிபியில் கொண்டு வருவதில் அடியேனுக்குத் தேவையான திறமை இல்லை. அச்சிடப்பட்ட க்ரந்தலிபியை*

வாசிப்பதில் ஶ்ரமம் அடியேனுக்கு இல்லை என்றாலும், பிதாமஹரின் கையெழுத்துப் ப்ரதி அடியேனை மலைக்க வைத்தது என்பது தான் உண்மை.

## 3. உதவிக்கு வந்த உத்தமர்கள்

இந்நிலையில் தான் தாம்பரத்திலே வஸித்து வந்த ஸ்ரீமதுபயவே. வித்வான் கொத்திமங்கலம் தேவனாதாசார்ய ஸ்வாமியின் உதவியை அடியேன் நாடினேன். “பரோபகாரார்த்தம் இதம் ஶரீரம்” என்றே வாழ்ந்த அந்த மஹான் பூதக்கண்ணாடியின் துணையுடன் எழுத்துக்களைப் பார்த்துத் தன்னால் புரிந்துகொள்ள இயலாத எழுத்துக்களைப் புள்ளிகளாகவே காட்டி தேவநாகரீ லிபிப் படிவத்தைத் தயார்செய்து கொடுத்தருளினார். ஆறு மற்றும் ஏழாம் பத்துக்களை அவர் தயார் செய்து கொடுத்த படிகளின் உதவியுடன் ஒருவாறு அச்சிட்டு வெளியிட முடிந்தது.

இந்நிலையில் அடியேனுடைய பொறுப்பின்மையால் மீதி மூன்று பத்துக்களுக்கு அவர் தயார் செய்து கொடுத்திருந்த தேவநாகரீப் ப்ரதியைத் தொலைத்து விட்டேன்.

அதனால் தளர்ந்து அழுத கண்ணினாய் இருந்த அடியேனுக்கு உதவி செய்திடுவதற்காக நறையூர் நம்பிக்கை நாச்சியாரும், நறையூர் நம்பியும் அடியேனுக்கு ஶிஷ்யனாக ஆயுஷ்மான் மாத்தூர் ப்ரவசனதிலகம் மருத்துவ டாக்டர். வேங்கடேஷ் அடியேனிடம் ஸ்ரீபாஷ்யம், பகவத்விஷயம், கீதாபாஷ்யம் ஆகிய க்ரந்தங்களை காலக்ஷேபம் செய்திட ஸங்கல்பம் செய்து அருளினார்கள்.

மஹாமேதாவீயான மருத்துவ டாக்டர் வேங்கடேஷ் க்ரந்த லிபியைக் கற்றுக்கொண்டு பிதாமஹனாரின் க்ரந்தக் கையெழுத்துப் ப்ரதியைத் துணிவுடன் அவர் புரிந்து கொண்டபடி தேவநாகரீயில் வடித்துத் தாத்பர்யரத்னாவலீ மற்றும் திருவாய்மொழி மூலத்தையும் இணைத்து மென்னகல் படிவத்திலே கொடுத்தார்.

அதை அடியேனுடைய அறிவுக்கு எட்டிய வரையில் பிதாமஹனாரின் கையெழுத்துப் ப்ரதியுடன் ஒப்பிட்டு ஸாக்ஷாத் ஸ்வாமியின் ஶப்தார்த்தம், மற்றும் அவராலேயே **“உரைகாரர்”** என்று போற்றப்பட்ட அழகிய மணவாளச்சீயரின் பன்னீராயிரப்படி மற்றும் திருவாய்மொழி வ்யாக்யானங்களுடன் சீர்செய்து கொண்டேன். ஆனால் சில இடங்களில் சீர்செய்யும் வழி அடியேனுக்குப் பிடிபடவில்லை அப்படி அடியேன் ஶ்ரமப்பட்ட இடங்களில் அடியேனுடைய தங்கையின் கணவர் ஸ்ரீமதுபயவே. மஹாவித்வான் மற்றும் மஹாகவி நாவல்பாக்கம் திநசஶ. Dr. V. கண்ணன் என்று ப்ரஸித்தரான யஜ்ஞம் ஸ்வாமியின் உதவியைப் பெற்றுக்கொண்டு ஒருவாறு எப்படியோ எட்டாம் பத்தை வெளியிட்டு விட்டேன்.

ஒன்பதாவது மற்றும் பத்தாவது பத்துக்களுக்கும் மருத்துவ டாக்டர் வேங்கடேஷ் அவர் புரிந்துகொண்ட அளவில் க்ரந்தலிபி ஶ்லோகங்களை தேவநாகரீ லிபியில் வடித்துத் திருவாய்மொழிப் பாசுரங்களையும், தாத்பர்யரத்னாவலீ ஶ்லோகத்தையும் இணைத்து

மென்னகல் படிவத்திலே ஏறத்தாழ அச்சுக்கான நிலையில் மிக விரைவிலேயே தயார் செய்து கொடுத்துவிட்டார்.

அவைகளைப் பிழையல்லாத படிவங்களாக்கப் பிதாமஹரின் கையெழுத்துப் படிகளோடு ஒப்பிட்டு அடியேன் ஓரளவு சீர் செய்துவிட்டதாக எண்ணித் தயார் செய்திருந்த படிகளை மின்னஞ்சல் மூலம் ஸ்ரீமதுபயவே. யஜ்ஞம் ஸ்வாமியின் பார்வைக்குப் பிதாமஹரின் க்ரந்தாக்ஷர மாத்ருகைகளின் நகல்களுடன் அனுப்பி வைத்தேன்.

மற்றுமொரு பார்வையும் இருக்கட்டும் என்று அடியேனுடைய திருத்தமக்கையின் குமாரனும் அடியேனிடம் வேதாத்யயனத்தையும் க்ரந்த சதுஷ்டய காலக்ஷேபத்தைச் செய்து வருபவனும் ஆன ஆயுஷ்மான் சிலுக்கூர் Dr. S. லக்ஷ்மீநரஸிம்ஹனுக்கும் சில பகுதிகளை அனுப்பி வைத்தேன். அவனும் தனது அலுவலகப் பணிகளுக்கு இடையிலே அவைகளை ஆய்ந்து தன் கருத்துக்களைத் தெரிவித்து வந்தான்.

ஸ்ரீமதுபயவே. யஜ்ஞம் ஸ்வாமி (இந்த ஸ்வாமி அடியேனைவிடப் பத்து மாதங்கள் மூத்தவர் இப்பொழுது ப்லவ ஐப்பசிச் சித்திரை நக்ஷத்ரத்திலே எழுபத்தைந்து திருநக்ஷத்ரங்கள் நிறையப் போகின்றன என்றாலும்) இன்றும் ஆந்திரமாநிலத்தில் அமராவதீ நகரில் உள்ள S.R.M. பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் பணியிலே இருக்கிறார். அவர் தமது பலபல பணிகளுக்கிடையே பதிகம் பதிகமாக அவைகளைக் கடாக்ஷித்து, அடியேன் கோட்டை விட்டிருந்த பல இடங்களையும் திருத்தங்களையும் அடியேனை விட அவருக்கிருக்கும் ஆழமான புலமையையும் க்ரந்த எழுத்துப் பயிற்சியையும் உரிய முறையிலே பயன்படுத்திப் பட்டியலிட்டு மின்னஞ்சல் மூலமாக அனுப்பி வைத்து உபகரித்தருளினார்.

இதற்கிடையிலே அடியேனுக்கு ப்ராஸ்ட்ரேட் க்ளாண்டில் புற்று நோய் வந்து கதிர் வீச்சு மருத்துவம் நடந்தது. எனவே இப்பணியை நிறைவேற்றாமலேயே போய்விடுவேனோ என்ற அச்சம் பிடித்துக் கொண்டது. அதனால் இதனை உடனேயே நிறைவு செய்துவிட வேண்டும் என்ற அழுத்தம் வந்து விட்டது. அதன் பயனாக அந்த ஸ்வாமியை அடியேன் தொலைபேசியில் இப்பணி பற்றித் தொடர்ந்து நச்சரித்துக் கொண்டே வந்தேன்.

இப்பொழுது இப்பணி அவருடைய உதவியினால் நிறைவடைந்து இந்த ஸஞ்சிகை வாசகர்களின் திருக்கைகளை எட்டிவிட்டது.

ஸ்ரீமதுபயவே. மஹாகவி மற்றும் மஹாவித்வானாகிய யஜ்ஞம் ஸ்வாமி அடியேனுடைய தங்கையை மணந்து கொண்டதால் அவருக்கு அடியேன் மைத்துனன் ஆகி அவருக்கு அடியேனை மிஞ்சிய உறவு இல்லை என்ற நிலை ஏற்பட்டிருக்கிறது என்று எண்ண வேண்டா.

## 4. பல தலைமுறைகளாக வந்து கொண்டிருக்கும் தொடர்பு

கி.பி. 1790-ல் அவதரித்தருளி ஸ்ரீலக்ஷ்மீ ஹயக்ரீவ ஸாக்ஷாத்காரம் செய்த நாவல்பாக்கம் ஸ்ரீமதண்ணயார்ய மஹாதேஶிகனை ஆஶ்ரயித்து அவருடைய அந்தரங்க ஶிஷ்யர்களில் முக்ய

இடம் பெற்றிருந்த ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமி (இவர் வில்லூர் நடாதூர் திருவம்ஶத்திலே அவதரித்தருளியவர். தமது க்ருஹஸ்தாஶ்ரமத்திலேயே ஸ்ரீமதண்ணயார்ய மஹாதேஶிகனை ஆஶ்ரயித்தவர். பிறகு விதுரர் ஆன நிலையில் ஸந்யாஸாஶ்ரமத்தை ஸ்வீகரித்தருளியவர்) மற்றும் மஹாமஹோபாத்யாய விருது பெற்ற வில்லூர் நடாதூர் ஸ்ரீஸுந்தரார்ய மஹாதேஶிக ஸ்வாமி ஆகிய மஹான்களின் காலத்திலேயே வில்லூருக்கும் நாவல்பாக்கத்துக்கும் வித்யா ஸம்பந்தம் தொடங்கி விட்டது.

ப்ரதிபிம்பலஹரீயை அருளிச்செய்த அடியேனுடைய பிதாமஹர் 1855-ல் அவதரித்து அருளியவர் என்று கூறியிருந்தேன் அல்லவா ? அவர் 1825-ல் அவதரித்தருளிய தமது தமையனார் முறையினரான ஸ்ரீஸுந்தரார்ய மஹாதேஶிகன் திருவடிகளிலே ஸ்ரீபாஷ்யம் முதலிய க்ரந்தசதுஷ்டயத்தையும் காலக்ஷேபம் செய்துவிட்டுப் பிறகு இராமநாதபுரம் ஸம்ஸ்தானத்திலே சில பல ஆண்டுகள் ஆஸ்தான வித்வானாக எழுந்தருளி இருந்தார். அதிலிருந்து விருப்ப ஓய்வு பெற்றுக்கொண்டு ஏகாந்த வாஸத்துக்காக வில்லூருக்கே எழுந்தருளிவிட்டார்.

அப்பொழுது ஸ்ரீபாஷ்யத்தினை ஶ்ருதப்ரகாஶிகையுடன் சிந்தனை செய்ய வாய்ப்பாக ஸ்ரீமதுபயவே. யஜ்ஞம் ஸ்வாமியின் பிதாமஹரின் திருத்தகப்பனார் ஆன அதாவது ப்ரபிதாமஹரான ஸ்ரீ(நீலமேக) தாதாசார்ய ஸ்வாமியைச் சிந்தனாசார்யராக வரித்தார். ஸ்ரீதாதாசார்ய ஸ்வாமியும் பிதாமஹனாரின் ப்ரார்த்தனையை ஏற்று நாவல்பாக்கத்திலிருந்து வில்லூருக்கு எழுந்தருளி அங்கேயே சிலகாலம் தங்கிச் சிந்தனை செய்வித்தருளினார் என்று அடியேன் திருத்தகப்பனார் சொல்லக் கேட்டிருக்கிறேன்.

மேற்படி ஸ்ரீதாதாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரராக 1890-ல் அவதரித்தருளியவர் ஸ்ரீமதுபயவே. யஜ்ஞம் ஸ்வாமியின் பிதாமஹரான ஸ்ரீமதுபயவே. திநசஶ நாராயணார்ய மஹாதேஶிக ஸ்வாமி. இந்த மஹான் ஸோமயாகம் அனுஷ்டித்து நித்யாக்னிஹோத்ரியாக எழுந்தருளி இருந்தார். யஜ்வா ஸ்வாமி என்றே இவரைக் குறித்திடுவது மரபாக இருந்தது.

ஸ்ரீமதுபயவே யஜ்ஞம் ஸ்வாமிக்கும் அடியேனுடைய தங்கைக்கும் 1971-ல் திருமணம் நடந்தது. அதற்கு முன்பேயே 1962 முதல் பலமுறை யஜ்வா ஸ்வாமியை அடியேன் தண்டம் ஸமர்ப்பிக்கும் வாய்ப்பு கிட்டியிருந்தது. அப்பொழுதெல்லாம் அவர் தாம் இளமையில் கீழ்த் திருப்பதியிலே வ்யாகரணம் பயின்றதையும், இரவில் ஒளிக்காகக் கோயிலுக்குச் சென்று அங்கு புஸ்தக-அவலோகனம் செய்ததையும், அப்பொழுது யாத்திரையில் அங்கு ஒருநாள் எழுந்தருளி இருந்த அடியேன் பிதாமஹர் அவரை இன்னார் என விசாரித்து அறிந்து கொண்டு மகிழ்ந்து, அவரை அவர் வைத்துக் கொண்டிருந்த வ்யாகரண ஸ்ரீகோஶத்தில் உள்ள விஷயங்களிலே சில கேள்விகளைக் கேட்டதையும், அவர் இறுத்த விடைகளைக் கேட்டுத் திருவுள்ளம் உகந்தருளிப் பாராட்டி ஆஶீர்வதித்தருளியதையும் நினைவுகூர்ந்து அருளாமல் இருந்ததில்லை.

*1968-71 கால கட்டத்திலேயே நம் ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமி தமது ஆசார்யரான பிதாமஹரின் திருவடிவாரத்தில் அவரைப் பற்றி தண்டகம், சக்ரபந்தம் எனப் பலவகைக் கவிதைகளை இயற்றி அசத்திக் கொண்டுதான் இருந்தார்.*

*ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமியின் மாதாமஹர் ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் வீரராகவார்ய மஹாதேஶிக ஸ்வாமியின் ஶுபமான ஸங்கல்பத்தாலும், திருவருளாலும் மற்றும் நாவல்பாக்கம் ஸ்ரீஅய்யாவாத்து ஸ்வாமி ஸ்ரீதேவநாத தாதார்ய மஹாதேஶிக ஸ்வாமியின் அருளாஶிகளாலும் அடியேன் தங்கைக்கும் ஸ்ரீமதுபயவே யஜ்ஞும் ஸ்வாமிக்கும் 1971-ல் திருமணம் நடந்தேறியது.*

*ஆஶுகவி ஸார்வபௌமரான அடியேனுடைய திருத்கப்பனாரின் ப்ரோத்ஸாஹத்தினால் யஜ்ஞும் ஸ்வாமியின் கவிதை மேலும் மெருகேறியது. அதனை ஸ்ரீமதுபயவே யஜ்ஞும் ஸ்வாமியே அடியேன் திருத்கப்பனாரின் ஸப்ததியின்போது அவர் ஸமர்ப்பித்த ஸப்ததி ஸப்தகத்தின் முதல் ஶ்லோகத்தில் கூறுவதைப் பாருங்கள்;*

**யஸ்மின் வாஜ்யாஸ்யவீக்ஷாऽதிகதரஸுபகா பண்டிதைஶ்ஶ்லாக்யமானா**
**யஸ்யாஶுத்வம் கவித்வே ப்ரதிதமஜனயத் ஸார்வபௌமேத்யுபாதிம் ।**
**யஸ்ய ப்ரோத்ஸாஹனேன ப்ரகுணித-கவிதா-பாடவா மத்ஸத்ருக்ஷா:**
**ஸ்ரீநித்யாக்யோ விபஶ்சித் ஸ ஜயதி ஸுதராம் ஸப்ததௌ ஸத்ததீட்ய: ॥**

*ஸ்ரீமதுபயவே. யஜ்ஞும் ஸ்வாமியின் கவிதைகளின் சீர்மையையும் ஏற்றத்தையும் காணும் போதெல்லாம் அடியேனுக்குப் பொறாமையும் வரும். பெருமிதமும் வரும். திருத்தகப்பனார் அந்த ஸ்வாமிக்குத் தமது குமாரத்தியுடன் கூடத் தனது கவிதைத் திறனையும் தானம் செய்து கொடுத்துவிட்டாரோ என்று கூட ஒரு ஸமயம் தோன்றும்.*

*''ப்ரதிபிம்பலஹரீயை அச்சுப்போடும் ஸமயத்தில் எமது பேரன் தவிக்க நேரிடலாம் அப்பொழுது உமது பேரன் உதவிட வேண்டும்'' என்று அடியேன் பிதாமஹர் ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமியின் பிதாமஹருடன் வானுலகில் கலந்துகொண்டு ஆஶீர்வதித்தருளியிருக்க வேண்டும். அதனால் தான் இந்தப் பதிப்புக்கு ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமி இப்படி ஒப்பற்ற ஒரு முக்யமான உபகாரத்தைச் செய்திருக்கிறார் என்றே அடியேன் நம்பிடுகிறேன்.*

*ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமியின் பிதாமஹரான யஜ்வா ஸ்வாமிக்கு அருளிச்செயலில் இருந்த ஈடுபாடும் அடியேனுடைய சொற்களால் வருணிக்க முடியாத ஒன்று. நாவல்பாக்கம் உத்ஸவப் புறப்பாடுகளில் பொதுவாக அருளிச்செயல் கோஷ்டீயைத் தொடங்கி வைத்துவிட்டுப் பின்னரே வேதபாராயண கோஷ்டீக்கு எழுந்தருளியாகும். திருமடல் போன்றவைகளின் பாராயணம் என்றால் அவைகளை அனுஸந்தித்து அனுபவித்திட முன் கோஷ்டீயிலேயே எழுந்தருளியாகும். எனவே ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமியின் இந்தக் கைங்கர்யம் யஜ்வா ஸ்வாமியின் திருவுள்ளத்துக்கு மிகவும் உகந்ததாயிருக்கும்.*

*இதை எல்லாம் அனுஸந்தித்து அடியேனுடைய பிதாமஹரைத் தான் வணங்கி, வருவதாக ஸ்ரீமதுபயவே. யஜ்ஞும் ஸ்வாமி யாத்து அளித்துள்ள* **ஶ்**லோகத்தைப் *பாருங்கள்:-*

**ப்ராசார்யஸ்ய மம ப்ரபாவவிதயம் ப்ராபய்ய தம் ஸ்வம் புரம்**
**ப்ராராத்யாதரத: ப்ரக்ருஷ்டவசஸாம் ப்ராபார்த்தஸஞ்சிந்தனம் ।**
**ப்ராஜ்ஞோஸாவிதி ஸத்ப்ரஶம்ஸநவச: ப்ராஹாஸக்ருன்மே குரு:**
**ப்ராஞ்சம் ஶேஷகுரும் ப்ரணாமஶதகம் ப்ராப்னோது தாஸஸ்ய மே ||**

*இதனை அடியேன்* ***1983****-ல் வெளியிட்ட திருத்தகப்பனாரின் ஸப்ததி மலரில் மஞ்ஜு ராமாயணத்திற் ஸ்ரீ யஜ்ஞும் ஸ்வாமி ஸமர்ப்பித்த பூமிகையில் காணலாம்.*

*ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமிக்குத் தலையல்லால் கைம்மாறு இல்லாத அடியேன் அவருக்குப் பல்லாண்டு இசைத்து அந்த ஸ்வாமி மேலும் மங்களங்களைப் பெற்றுப் பொலிய வேண்டும் என்று அடியோங்கள் குடிலின் திருவாராதனப் பெருமாளான ஸ்ரீஸ்வர்ண லக்ஷ்மீதர நவநீதநட ஸ்வாமியின் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.*

## 5. நன்றி நவிலல்

*அதுபோலவே இக்கைங்கர்யத்தில் அடித்தளம் அமைத்து மஹோபகாரம் செய்து உதவிய மருத்துவ டாக்டர் ஆயுஷ்மான் வேங்கடேஷிற்கு மேன்மேலும் மங்களங்கள் நிறைய அடியேனின் ஆஶிகள். அப்படியே இக்கைங்கர்யத்தில் ஆர்வத்துடன் பணிசெய்ய முன்வந்த அடியேனுடைய பாகினேயன் ஆயுஷ்மான் டாக்டர் சிலுக்கூர் எஸ். லக்ஷ்மீநரஸிம்ஹனுக்கும் மேன்மேலும் மங்களாபிவ்ருத்தி ஏற்பட அடியேனுடைய ஆஶிகள்.*

*ப்ரதிபிம்பலஹரீயின் எட்டாம் பத்து வரை ஆகிய முதல் ஐந்து ஸஞ்சிகைகள் ஸ்ரீநடாதூர் அம்மாள் டிரஸ்டு மூலமாகவே வெளியிடப்பட்டு வந்தள்ளன. ஆனால் தற்பொழுது அந்த தர்மஸ்தாபனம் அதன் முக்யச் செயலான ஸ்ரீநடாதூரம்மாள் திருநக்ஷத்ர வார்ஷிக ஸ்ரீபாஷ்ய வித்வத் ஸதஸ்ஸை நடத்திடவே* **ஶ்**ரமப்படும் *பொருளாதார நெருக்கடியில் உள்ளபடியால் அடியேனுடைய ஸப்ததியின் பொழுது அமைக்கப்பட்ட குழு ஸ்ரீநடாதூர் அம்மாள் டிரஸ்டுக்கு இந்த ஸஞ்சிகையை வெளியிடத் தேவையான நிதியுதவி செய்திட முன்வந்தது. அதற்காகத் தங்கள் இஷ்ட உபயோகத்துக்காக நானூறு ப்ரதிகள் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டது. இதற்கு ஸ்ரீநடாதூர் அம்மாள் டிரஸ்டின் ஒப்புதலைத் தெரிவித்து இந்த நூலை ஸ்ரீநடாதூர் அம்மாள் டிரஸ்டின் வெளியீடாக ஆக்கி ஆட்கொண்ட ஸ்ரீநடாதூர் அம்மாள் டிரஸ்டின் மானேஜிங் டிரஸ்டியான ஸ்ரீமதுபயவே. வில்லூர் நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம் சேஷாத்ரி என ப்ரஸித்தரான ஸ்ரீமதுபயவே. வேங்கடஶேஷார்ய மஹாதேஶிக ஸ்வாமியின் திருவடித் தாமரைகளில் நன்றிகலந்த நல்வணக்கங்களை ஸமர்ப்பித்து தன்யனாகிறேன்.*

*ஸ்ரீசேஷாத்ரி ஸ்வாமி ப்ரதிபிம்பலஹரீயை அருளிச்செய்த ஸ்ரீமதுபயவே. மஹாவித்வான் வில்லூர் நடாதூர் ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸனாதிபதி* ***ஸாஹித்ய வ்யாகரண வாசஸ்பதி.***

ஸ்ரீவேங்கட ஸேஷார்ய மஹாதேஸிக ஸ்வாமியின் மூத்த திருப்பேரர். அடியேனுக்கு மூத்த திருத்தமையனாரான இந்த ஸ்வாமி அடியேனைத் திருத்திப் பணிகொண்டு மகிழ்பவர்.

ப்ரதிபிம்பலஹரீயுடன் பிதாமஹர் **ஸங்கதி மணி மாலா** என்ற தலைப்பில் ஒவ்வொரு திருவாய்மொழியின் தொடக்கத்திலும் ஒரு ஶ்லோகம் திருவாய்மொழிகளின் தொடர்ச்சியினைக் காட்டிடும் வகையில் அருளத் தொடங்கி இருந்தார். ஆனால் அந்த நூல் முதல் பதினோரு திருவாய்மொழி வரை தான் கிடைத்தது. "மீதித் திருவாய் மொழிகளுக்கு நீயே ஸங்கதி மணி மாலாவை எழுதிடு" என்று திருத்தகப்பனார் நியமித்தருளியபடி அடியேன் 89 திருவாய்மொழிகளுக்கான 89 ஶ்லோகங்களை எழுதி நிறைவு செய்துள்ளேன். அப்பொழுதைக்கப்பொழுது அந்த ஶ்லோகங்களைக் கடாக்ஷித்து விமர்சித்துப் பாராட்டி உத்ஸாஹப்படுத்தி அருளியவர் இந்த ஸ்வாமி. இவருக்கும் அடியேன் தலையல்லால் கைம்மாறு கண்டிலேன்.

இந்த ஏற்பாடு மூலம் நிதி உதவி செய்த VKSCC எனச் சுருக்கமான ஆங்கிலப் பெயரினை உடைய ஸப்ததிக் குழுவிற்கும் அடியேனின் நன்றிகள்.

## 6. ஸ்ரீபத்மநாப கடாக்ஷ நக்ஷத்ரமாலா மற்றும் பொழிப்புரை

திருவனந்தபுரத்திலே ஸ்ரீமதுபயவே. கோபாலஸமுத்ரம் நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனம் ஸ்ரீநிவாஸஸேஷார்ய மஹாதேஸிக ஸ்வாமியின் திருநக்ஷத்ரமான ஆனி க்ருத்திகையை ஒட்டி ஒரு வித்வத் ஸதஸ் 1998 முதல் அடியேன் மூலமாக அதற்கென்று அவருடைய தர்மபத்னீ மாதுஸ்ரீ ஜயலக்ஷ்மீ அம்மங்கார் ஏற்படுத்திய அறக்கட்டளையின் நிதியைக் கொண்டு நடந்து வருகிறது. (கொரானா கெடுபிடியால் சென்ற ஆண்டு மட்டும் ஸ்ரீரங்கத்திலே நடந்தது. இந்த ஆண்டும் அதே நிலை தான் என்பது வேறு விஷயம்).

2017-ஆம் ஆண்டு மஹாமஹோபாத்யாய வேதபாஷ்ய ரத்னம் தர்ஶனகலாநிதி ராஷ்ட்ரபதி ஸம்மானித முல்லைவாசல் ப்ரஹ்மஸ்ரீ க்ருஷ்ணமூர்த்தி சாஸ்த்ரிகள் அடியேன் அழைப்பினை ஏற்று அதிலே பங்கேற்கச் சென்னையிலிருந்து தமது ஶ்ரமத்தைக் கணிசியாது திருவனந்தபுரம் வந்தார்.

ப்ரதிபிம்பலஹரீயின் கர்த்தாவான அடியேன் பிதாமஹர் திருவனந்தபுரம் பத்மனாபன் விஷயமாக **ஸ்ரீபத்மனாப கடாக்ஷ நக்ஷத்ரமாலா** என்ற துதியையும் அருளியுள்ளார். இதன் மூலத்தினை மட்டும் அடியேன் தேவநாகரீ லிபியில் திருத்தகப்பனாரின் ஸப்ததியை ஒட்டி 1983-ல் வெளியிட்ட மலரிலே அச்சிட்டிருந்தேன்.

திருவனந்தபுரம் ஸதஸ்ஸிற்கு வந்த பரம ரஸிகரான ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகளிடம் அதைக் காண்பித்தேன். அதைக் கண்டு பரவஶரான அவர் அதற்குத் தாமே தமிழில் ஒரு சுருக்கமான பொழிப்புரை எழுதித் தருவதாக ஆர்வத்துடன் முன் வந்தார்.

## 7. ஆராவமுதாழ்வானும் அனந்தபுரத்தாதியும்

திருவாய்மொழி பத்தாம் பத்தின் இரண்டாம் பதிகமான **கெடுமிடராய எல்லாம்** என்பதிலே ஆழ்வார் திருவனந்தபுரத்தினை மங்களாஶாஸனம் செய்கிறார். அப்பதிகத்தில் எட்டாம் பாசுரத்திலே வரும்;

**படமுடையரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண**
**நடமினோ நமர்களுள்ளீர்! நாமுமக்கறியச்சொன்னோம்**

என்ற அடிகள் நம் ஸம்ப்ரதாயத்தின் நிலையையே மாற்றி அமைத்தவை. எப்படி ?

ஆளவந்தார் மணக்கால் நம்பிகளிடம் பயில்கையில் பக்தியோகம் பற்றியும், அதிலே கிடைக்கும் அனுபவம் பற்றியும், மணக்கால் நம்பி விவரித்தருளினார். ஆளவந்தாருக்குப் பக்தியோகம் செய்து அந்த அனுபவத்தையும் பெறவேண்டும் என்ற ஆர்வம் வந்தது. பக்தியோகம் செய்யும் முறையை உபதேஶம் செய்தருள வேண்டும் என மணக்கால் நம்பிகளிடம் வேண்டினார்.

"எனது ஆசார்யரான உய்யக்கொண்டார், நாதமுனிகள் பக்தியோகம் செய்யும் முறையை உபதேஶிக்க முன்வந்தபோதும் தனக்கு அனைவருக்கும் உரிய ப்ரபத்தி நெறியே போதும் பக்தியோகம் செய்யும் முறை தெரியவேண்டா என்று மறுத்து விட்டார். அதனால் அவருக்கு பக்தியோகம் செய்யும் முறை உபதேஶம் ஆகிடவில்லை. எனக்கும் அதனால் அம்முறை உபதேஶம் ஆகிடவில்லை. நாதமுனிகளிடம் பக்தியோகம் செய்யும் முறையைக் கற்று அதனை அனுஷ்டித்து வரும் திருக்குருகைக் காவலப்பன் பக்கல் சென்று உபதேஶம் பெற்றிடலாம்" என்றார் நம்பிகள்.

திருக்குருகைக் காவலப்பனை நாடிச் சென்றார் ஆளவந்தார். தை மாதப் புஷ்யத்தில் அபிஜித் முஹூர்த்தத்தில் தான் வைகுந்தம் போகப் போவதாகவும் அன்று காலை வந்தால் பக்தியோகம் செய்யும் முறையை உபதேஶம் செய்வதாகவும் திருக்குருகைக் காவலப்பன் அருளினார். அந்த நாளை ஒரு சிறுமுறியில் குறித்துக் கொண்டார் ஆளவந்தார். திருவரங்கம் மீண்டார்.

அங்கு அத்யயனோத்ஸவம் நடந்து கொண்டு இருந்தது. ஆளவந்தார் அதனை ஈடுபாட்டுடன் ஸேவித்துக் கொண்டிருந்தார்.

இராப் பத்துப் பத்தாம் திருநாள் :

அரையர் :

**கடுவினை களையலாகும், காமனைப் பயந்த காளை**
**இடவகை கொண்டதென்பர், எழிலணி யனந்தபுரம்**
**படமுடையரவில் பள்ளி பயின்றவன் பாதம் காண**
**நடமினோ நமர்களுள்ளீர்! நாமுமக்கறியச்சொன்னோம்.**

என்ற பாசுரத்துக்கு அபிநயம் காட்டுகையில் திருவனந்தபுரம் திசை நோக்கி நாலைந்து அடிகள் நடப்பதாக அபிநயம் செய்தார்.

(காலப்போக்கில் அரையர்கள் அபிநயத்துக்கு என்று தேர்ந்தெடுத்துக் கொண்ட பாடல்கள் மாறி விட்டன போலும்! தற்போது இப்பாட்டுக்கான அபிநயம் அரையர் ஸேவையில் இடம் பெறுவதில்லை.)

இதனைக் கண்ட ஆளவந்தார் மனதில் ஆழ்வார் "நமர்களாகில், நீங்கள் திருவனந்தபுரத்து எம்பெருமான் பாதம் பணிந்தவராக இருக்க வேண்டும்" என்று அறிவித்தருளுகிறார் என்ற எண்ணம் ஓர் மின்னல் எனத் தோன்றியது. உடனேயே திருவனந்தபுரம் நோக்கிக் கிளம்பிச் சென்றார். அங்கு பத்மனாபனை ஸேவித்து மகிழ்கையில் திருக்குருகைக் காவலப்பன் குறித்த நாள் பற்றி நினைவு வரத் தான் வைத்திருந்த அம்முறியை எடுத்துப் பார்த்தார். அன்று தான் அந்த நாள்!

திருவனந்தபுரத்திலிருந்து திருக்குருகைக் காவலப்பன் எழுந்தருளியிருக்கும் இடத்துக்கு அன்றைய நாளிலேயே செல்ல வேண்டும் என்றால் ஒரு புஷ்பக விமானம் இன்றி இயலாது. திருக்குருகைக் காவலப்பன் தன்னடிச் சோதிக்கு எழுந்தருளிட, பக்தியோகம் செய்யும் முறை அவருடன் முடிந்து விட்டது.

உய்யக்கொண்டார் நாதமுனிகளிடம் உபதேஶமாகப் பெற்று மணக்கால் நம்பிக்கருளி அவர் ஆளவந்தார்க்கு அருளி அவருடைய சீடர்களிடமிருந்து எம்பெருமானார் பெற்ற அனைவருக்கும் பொதுவான அடைக்கல நெறியே இப்பொழுது நடைமுறையிலே உள்ளது.

இதனால் ப்ரபன்ன ஜனஸந்தான கூடஸ்தரான நம்மாழ்வார் அனுஷ்டித்த "அந்தணர் அந்தியர் எல்லையில் நின்ற அனைவருக்கும்" பொதுவான எளிய ப்ரபத்திநெறியே போட்டி இன்றித் தனி அரசாக இன்று திகழ்கின்றது.

ஆளவந்தார் திருக்குருகைக் காவலப்பன் பக்கலில் பக்தி யோகரஹஸ்யத்தைப் பெற்று அதை ப்ரசாரத்துக்குக் கொண்டு வந்திருந்தால், நம்மில் சிலர் அசட்டுத் துணிச்சலுடன் அரிய அவ்வழியில் இழிந்து தவிக்கும் நிலை கூட வந்திருக்கும்.

அதனால் ஆழ்வாரின் அருளிச் செயலைக் காத்தருளிய ஆராவமுதாழ்வைனைப் போல, ஆழ்வாரின் ப்ரபத்தி நெறியைத் தனி அரசாகச் செங்கோல் ஓச்சச் செய்து காத்தவன் அனந்தபுர ஆதி என்றால் மிகை ஆகாது. அவனை மங்களாஶாஸனம் செய்ய ஆளவந்தார் யாத்திரை சென்றதால் தானே அவருக்கு பக்தியோக ரஹஸ்யம் கிடைக்காது போயிற்று.

எனவே அவனைப் பற்றிய ஸ்ரீபத்மனாப கடாக்ஷ நக்ஷத்ரமாலாத் துதியையும் மஹாமஹோபாத்யாய ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகளின் பொழிப்புரையுடன் இதே ஸஞ்சிகையிலே வெளியிட்டுள்ளேன். இந்த அழகிய பொழிப்புரையைத் தாமே முன்வந்து

எழுதிக் கொடுத்த ஸ்ரீக்ருஷ்ணமூர்த்தி ஶாஸ்த்ரிகளுக்கு அடியனுடைய க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## 8. அச்சகத்துக்கு நன்றி

இந்த ஸஞ்சிகையைப் பலமுறைகள் ப்ரூப் தந்து பிழைகளே இல்லை என்று சொல்லும்படி மிக அழகான முறையிலே அச்சடித்துக் கொடுத்த RNR அச்சகத்தின் உரிமையாளர் ஸ்ரீமான் ராஜன் தொடங்கிப் பணியிலே ஈடுபாட்டுடன் அங்குப் பணிபுரியும் ஒவ்வோர் ஊழியருக்கும் நன்றி கலந்த பாராட்டுக்களை நல்கி நிறைவு பெறுகிறேன். அடியேனுடைய P.A. ஆன ஸ்ரீமான் கனஷ்யாம் அவர்களும், ஸாரதியான ஸ்ரீமான் P. ஸுதாகர் அவர்களும் ப்ரூபைக் கொண்டுவரல், பிறகு அச்சகத்தில் சேர்த்தல் என்ற பல துறைகளில் மிகவும் உதவி செய்துள்ளார்கள் அவர்களுக்கும் எனது நன்றி உரித்தாகுக.

## 9. முகப்பு அட்டைப் படமும் மற்றைய படங்களும்

திருக்குடந்தையில் **அக்ஷய த்ருதீயைப்** பொன்னாளில் காலையில் உலகப் ப்ரஸித்தமான பன்னிரண்டு கருடஸேவை நடைபெறுகின்றது அல்லவா ? அது நிறைந்த பிறகு ஸ்ரீஆராவமுதாழ்வான் தமது திருக்கோயிலுக்கு மீண்டு உச்சிக்காலத் திருவாராதனம் கண்டருளிடுகின்றான்.

அதற்கப்புறம் பெரிய கடைத் தெருவில் அமைந்துள்ள ஸ்ரீராஜகோபாலஸ்வாமி கோயிலுக்கு எழுந்தருளிடுகிறான். அங்கு ஸ்ரீராஜகோபால ஸ்வாமியும் மற்றும் அங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீஸந்தான வரததேஶிகன் திருக்கோலத்தில் காட்சி தரும் **ஸ்ரீநடாதூர் அம்மாளும்** உடன் திகழ, மண்டபாராதனம் கண்டருளி இரவு பத்து மணி அளவில் தனது திருக்கோயிலுக்கு மீள்கிறான்.

இந்த நிகழ்ச்சி தற்பொழுது அடியேன் மற்றும் அடியேனுடைய தமையனார் முறையினரான ஸ்ரீ உ.வே. வில்லூர் நடாதூர் க்ருஷ்ணமாச்சார்ய ஸ்வாமியின் குமாரனான சிரஞ்ஜீவி வில்லூர் நடாதூர் வரதராஜன் ஆகிய இருவரும் இணைந்து செய்யும் மண்டகப்படியாக நடந்து வந்து கொண்டிருக்கும்படி ஸ்ரீஆராவமுதாழ்வான் ஸங்கல்பம் செய்தருளியிருக்கிறான்.

**ஸந்தான வரததேஶிகன்** திருக்கோலத்தில் திகழும் ஸ்ரீநடாதூர் அம்மாள் என்ற தொடர் நம் ஸம்ப்ரதாயத்தில் நடந்த ஓர் அத்புதமான நிகழ்ச்சியின் அடிப்படையில் அமைந்தது.

ஸ்ரீராமானுஜரின் இளைய தங்கை கமலா அம்மங்கார். அவருடைய திருக்குமாரர் ஸ்ரீநடாதூர் ஆழ்வான். ஸ்ரீராமானுஜர் தமது மருமகனான இவருக்குத் தமது ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸனத்தை அருளி ஸ்ரீபாஷ்யத்தைப் ப்ரவசனம் செய்யும் கடமையையும்

அளித்தருளிய வரலாற்றைத் தொன்மையான திருவாறாயிரப்படி முதலான அனைத்து குரு பரம்பரைகளும் பதிவு செய்துள்ளன.

மேற்படி நடாதூர் ஆழ்வானின் திருப்பேரர் ஆக அவதரித்தருளியவர் ஸ்ரீநடாதூர் அம்மாள். அவர் சில காலம் திருக்குடந்தையில் தங்கி இருந்துள்ளார். அப்பொழுது அங்கு வாழ்ந்த கந்தளன் என்ற அந்தணனைப் பிடித்த பேயை விரட்டிடத் திருக்குடந்தையில் காட்சி தரும் ஸ்ரீசக்ரபாணிப் பெருமாளாகிற சக்ரத்தாழ்வானைப் பற்றி **ஹேதிபுங்கவஸ்தவம்** என்ற துதியினை அருளிச் செய்திருக்கிறார். ஸ்ரீசக்ரபாணிப் பெருமாளாகிற சக்ரத்தாழ்வானுடைய கருணையால் அப்பேயை விரட்டி அந்த அந்தணனைக் காத்தருளியிருக்கிறார். இவ்வரலாற்றை ஸ்ரீநடாதூர் அம்மாள் சரித்ரத்தைக் கூறும் **வரததேஶிகாப்யுதயம்** போன்ற நூல்களில் நாம் காண்கிறோம்.

பின்னர் ஸ்ரீநடாதூர் அம்மாள் காஞ்சீயில் தேவப்பெருமாளுடைய ஸந்நிதியின் கிழக்குப் ப்ராகாரத்தில் ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம், பகவத்விஷயம் ஆகிய க்ரந்தங்களை பலருக்குக் காலக்ஷேபமாக ஸாதித்து வந்தார். அந்த காலக்ஷேப கோஷ்டியில் **கிடாம்பி அப்புள்ளாரும்** ஒருவராக இருந்து ஸ்ரீநடாதூர் அம்மாள் திருவடிவாரத்தில் பயின்று வந்தார்.

ஒருநாள் அவர் தமது ஸஹோதரீ **தோதாரம்மங்காருடைய** குமாரனாக அவதரித்திருந்த ஸ்வாமி தேஶிகனையும் அழைத்துக் கொண்டு கோஷ்டியை ஸேவிக்க வந்திருந்தார். ஐந்து வயது பாலகனான தேஶிகனைக் கண்டு **"அஞ்சுடர் போன்று இவர் ஆர் கொல்?"** என்று கோஷ்டியே வியந்தது.

அதன் பிறகு காலக்ஷேபம் தொடர்கையிலே விட்ட இடம் கோஷ்டியிலே யாருக்குமே உடனேயே நினைவுக்கு வரவில்லை. அப்பொழுது மழலைப் பருவத்து தேஶிகன் அதனை நினைவு கூர்ந்து சொல்லவே, மிகவும் மகிழ்ந்த ஸ்ரீநடாதூர் அம்மாள் மழலைப் பருவ தேஶிகனை எடுத்து வாரி அணைத்து மடி மீதமர்த்தி ஆசிகளை அருளி இருக்கிறார். இப்படி அம்மாள் தமக்கு அருளிய ஆஶிகள் தாம் தம்மை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வந்ததாக ஸ்வாமி தேஶிகனே தமது நூல்களில் பல இடங்களிலே நன்றியுடன் பதிவு செய்துள்ளார்.

இப்படி பால தேஶிகனைத் தமது மடி மீது அமர்த்தி ஆஶி வழங்கி ஸ்ரீவைஷ்ணவ ஸந்தானத்துக்கு நல்லருள் செய்த திருக்கோலத்திலே திகழும் ஸ்ரீநடாதூர் அம்மாளையே **ஸந்தான வரத தேஶிகன்** என்று குறிப்பிடுகிறோம். இந்தத் திருக்கோலத்தில் ஸ்ரீராஜகோபாலன் ஸந்நிதியிலே ஸ்ரீநடாதூர் அம்மாள் ஸேவை ஸாதிக்கிறார்.

அக்ஷய த்ருதீயை தினத்திலே மாலையில் ஆராவமுதாழ்வான் பெரிய கடைத் தெருவிலே ஸ்ரீராஜகோபாலன் திருக்கோயிலிலே ஸ்ரீராஜகோபாலனுடனும் ஸ்ரீஸந்தான வரத தேஶிகனுடனும் மண்டபாராதனம் கண்டருளும் காட்சியின் புகைப்படமே இந்நூலின் முகப்பட்டையிலே இடம் பெற்றுள்ளது.

இந்த ராஜகோபாலன் ஸந்நிதியின் முழு உரிமை அர்ச்சகராகத் திகழ்பவர் பாஞ்சராத்ர பாஸ்கரரான ஸ்ரீசக்ரபாணி பட்டாசார்ய ஸ்வாமி. இவர் தற்பொழுது ஸ்ரீஆராவமுதாழ்வான் ஸந்நிதியின் ப்ரதான பட்டாசார்யருமாவார். இவர் தான் அடியோங்களுடைய அக்ஷய த்ருதீயை மண்டகப்படியைச் சீரும் சிறப்புமாக நடத்தித் தந்து கொண்டிருக்கிறார். இந்த முகப்பு அட்டைப் புகைப்படமும் இவராலே தான் கிடைத்தது. இந்த உதவிக்கெல்லாம் இவருக்குத் தலையல்லால் கைம்மாறு இல்லாத நிலையிலே அடியேன் இருக்கிறேன்.

அது சரி. மேற்படிப் படத்துக்கும் இந்தப் புத்தகத்துக்கும் என்ன தொடர்பு என்று கேட்கிறீர்களா ?

திருக்குடந்தையில் ஆண்டு தோறும் தை மாதப் பிறப்பு அன்று ரதோத்ஸவம் வரும்படியாக மார்கழி மாதம் இருபத்திரண்டு அல்லது இருபத்து மூன்றாம் தேதியளவில் கொடியேறி ஸங்க்ரமணப் ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுகின்றது. அதற்குத் தடங்கல் ஏதுமே இல்லாதபடி மார்கழி முதல் தேதி ஆன மார்கழித் திங்கள் தொடங்கிப் பகல் பத்து மார்கழிப் பத்தாம் தேதியான நோற்றுச் சுவர்க்கத்திலே நிறைவேறும். மார்கழிப் பதினொன்றாம் தேதியான கற்றுக்கறவையிலே தொடங்கி இராப்பத்து நடைபெறும்.

இராப்பத்தின் ஐந்தாம் திருநாள் அதாவது மார்கழியின் பதினைந்தாம் நாளான **எல்லே**யில் ஸ்தலப் பாசுரமான திருவாய்மொழி ஐந்தாம் பத்தின் எட்டாம் பதிகமான **ஆராவமுதே** விண்ணப்பம் ஆகும். அன்று அதற்காக **நம்மாழ்வார் திருவடித் தொழல்** ஒன்று நடைபெறும். இதற்காக அன்றைய தினம் கோமளவல்லீ நாச்சியாரும் ஸ்ரீதேவீ பூதேவீயும் உடன் எழுந்தருள ஸ்ரீஆராவமுதாழ்வான் பரமபதநாதன் திருக்கோலத்திலே ஸேவை ஸாதிப்பான். அந்த அத்புதமான ஸேவையின் புகைப்படமும் இந்நூலின் நிறைவிலே வெளியிடப்பட்டுள்ளது. தமது முக நூலிலிருந்து அப்புகைப்படத்தைப் பதிவிறக்கம் செய்து வெளியிட அனுமதி அளித்தவர் ஸ்ரீஆராவமுதாழ்வான் ஸந்நிதியின் முக்ய பட்டர்களுள் ஒருவரான ஸ்ரீஸௌந்தரம் பட்டர் ஆவார். அவருக்கும் அடியேனுடைய நல் வணக்கம் நிறைந்த நன்றிகள்.

**ஆராவமுதே** பதிகத்தில் ஆழ்வார் ஸ்ரீஆராவமுதாழ்வானிடம் :-

**களைவாய்துன்பம் களையாதொழிவாய், களைகண் மற்றிலேன் ★**
**வளைவாய் நேமிப் படையாய் ! குடந்தைக் கிடந்த மாமாயா ! ★**
**தளரா வுடலம் எனதாவி, சரிந்து போம் போது ★**
**இளையாது உன தாள் ஒருங்கப் பிடித்துப் போத, இசை நீயே.**

என்று வேண்டியபடி, அர்ச்சிராதிகதியினை வருணிக்கும் ஆழ்வார் தனது தாளைப் பிடித்துப் போத வாய்ப்பாக ஸ்ரீஆராவமுதாழ்வான் ராஜகோபாலனாக அவருக்குக் காட்சி

*அளித்திருக்கிறான் போலும்! எனவே தான் ஆழ்வார் அர்ச்சிராதி கதியை வருணிக்கும் பத்தாம் பத்தின் ஒன்பதாம் திருவாய்மொழியான* ***சூழ்விசும்பிலே*** *ஏழாம் பாசுரத்திலே;*

**மடந்தையர் வாழ்த்தலும், மருதரும் வசுக்களும் ★**
**தொடர்ந்து எங்கும், தோத்திரம் சொல்லினர் ★**
**தொடு கடல் கிடந்த எங்கேசவன், கிளரொளி மணிமுடி ★**
**குடந்தை எங்கோவலன், குடியடியார்க்கே.**

*என்று அருளிச் செய்கிறார் போலும்.*

*சாந்தோக்ய உபநிஷத் முதலிய உபநிஷத்துக்களும் ஆழ்வாரும் வருணித்தருளிய* ***அர்ச்சிராதி கதியை*** *ஶரணாகதர்கள் நித்யம் சிந்தனை செய்திட வேண்டும். இதற்குப் பாங்காகப்* ***பரமார்த்த ஶ்லோக த்வயம்*** *என்ற தலைப்பில் இனிய இரண்டு ஶ்லோகங்களால் இதனைக் காட்டிய வள்ளல் ஸ்ரீநடாதூர் அம்மாள்.*

*அதனையே விவரித்து மணிப்ரவாள நடையிலே* ***ஸ்ரீமத்ரஹஸ்ய த்ரயஸாரம், பரமபதஸோபானம்*** *முதலிய ப்ரபந்தங்களில் அருளியவர் அம்மாளின் இன்னருளை இளமையிலேயே பெற்ற ஸ்வாமி தேஶிகன்.*

*ஸ்வாமி தேஶிகனாகிய ப்ரஶிஷ்யனுக்குத் திருவருள் செய்யும் அவருடைய பரமாசார்யரான ஸ்ரீநடாதூர் அம்மாள் உடன் திகழ ராஜகோபாலனுடன் காட்சி அருளும் ஸ்ரீஆராவமுதாழ்வானை மங்களாஶஸனம் செய்வது போல உள்ளது பத்தாம் பத்தில் வரும்*

**குடந்தை எங்கோவலன், குடியடியார்க்கே**

*என்ற துணுக்கு. அதற்கு ஏற்ப இந்த ஒன்பது மற்றும் பத்தாம் பத்துக்குரிய* ***ப்ரதிபிம்பலஹரீ****யின் முகப்பு அட்டைப் புகைப்படம் அமைவது பொருத்தமானது தானே!*

***ப்ரதிபிம்பலஹரீ****யை அருளிச்செய்த அடியேனுடைய பிதாமஹருக்கு உரிய ஒரு சிறு நிலப்பரப்பு வில்லூர் ஸ்ரீக்ராமத்திலே ஸ்ரீராஜகோபாலக்ருஷ்ண ஸ்வாமியின் திருக்கோயிலுக்குப் பின்புறத்திலே அமைந்துள்ள திருக்குளத்துக்கும் திருகோயிலுக்கும் இடையே உள்ளது. அங்கு ஒரு தோட்டம் போட்டிருந்தார் பிதாமஹர். ப்ரதி வர்ஷமும் பங்குனி மாதம் ப்ரஹ்மோத்ஸவம் ஒன்பதாம் திருநாளில் திருத்தேர் நிலைக்கு வந்தவாறே பெருமாள் திருக்குளத்துக்கு எழுந்தருளி தீர்த்தவாரி கண்டருள்வார். பிறகு திரும்புகாலில் பிதாமஹரின் தோட்டத்துக்கு எழுந்தருளி அங்கு போடப் பட்டிருக்கும் பந்தலில் மண்டபாராதனம் கண்டு பிறகு திருக்கோயிலுக்கு எழுந்தருளிடுவார் என்று ஓர் ஏற்பாட்டைப் பிதாமஹர் செய்திருந்தார். அப்படிச் சில ஆண்டுகள் நடந்து வந்தது. பிறகு அது நின்று போய் விட்டது. ஏறத்தாழ நூறு ஆண்டுகளாக நடைபெறவில்லை.*

திருத்தகப்பனார் நியமனப்படி பிதாமஹர் மூலம் வந்த பரம்பரைச் செல்வங்களை அவருடைய பேரர்களாகிய நாங்கள் நால்வரும் பிரித்துக் கொள்ளாமல் வில்லூர் ஆஶுகவி குடும்ப அறக்கட்டளை (Villur Asukavi Family Trust) என்ற ஓர் அமைப்பில் கொண்டு வந்து விட்டோம். அது ஆங்கிலத்திலே VAFT எனச் சுருக்கமாக அழைக்கப்பட்டு வருகின்றது. தற்பொழுது VAFT-ன் உடைமையாக்கப்பட்ட அந்நிலப் பரப்பில் ஒரு நிரந்தர மண்டபத்தை ஸஹோதரர்கள் நாங்கள் நால்வரும் சேர்ந்து கட்டினோம். நூறு ஆண்டுகளுக்கு மேலாக நின்று விட்ட அந்நிலப் பரப்புக்கு ஸ்ரீராஜகோபால க்ருஷ்ணஸ்வாமி எழுந்தருளும் உத்ஸவத்தை மீண்டும் தொடர வேண்டும் என்று கேட்டுக் கொண்டோம். கோயில் நிர்வாஹத்தினர் அதனை ஏற்றுக் கொண்டார்கள். தற்பொழுது ஸந்நிதி அர்ச்சகராகப் பணி புரியும் ஸ்ரீஶேஷகோபாலன் ஸ்வாமியும் ஊர்ப் பெருமக்களும் ஒத்துழைக்க ஶார்வரீ ஆண்டு அதாவது 2021-ஆம் ஆண்டுக்கு உரிய பங்குனி ப்ரஹ்மோத்ஸவத்தில் ரோஹிணீ நாளில் தீர்த்தவாரி ஆனவுடன் திருக்குளத்திலிருந்து திரும்புகையில் பெருமாள் அந்த மண்டபத்திற்கு ஸ்ரீருக்மிணீ ஸத்யபாமா ஸமேதனாக எழுந்தருளி அனுக்ரஹித்தருளினான். பதினோராம் திருநாளில் தேர்த் தடம் பார்க்கும் யானை வாஹனத்திலும் மீண்டும் ஒருமுறை எழுந்தருளி அனுக்ரஹம் செய்தருளினான்.

அந்த இரு நிகழ்ச்சிகளைப் பற்றிய புகைப்படங்களையும் இந்நூலுடன் இணைத்துள்ளேன்.

ஆனாலும் இங்கே ஓர் அதிஶயம் பாருங்கள்!

முப்பத்தைந்து ஆண்டுகளாக நிறைவேறாமல் இருந்து வந்த ப்ரதிபிம்பலஹரீயின் வெளியீட்டின் நிறைவை அந்த மண்டபத்தில் எழுந்தருளி உகந்த உடனேயே ஸ்ரீராஜகோபாலக்ருஷ்ணஸ்வாமி அடுத்த நான்கு மாதங்களிலே நிறைவேற்றிவிட்டான். அதனால் அவனுக்கும், அவனுடைய திருக்கோயில் நிர்வாஹத்தினருக்கும், அவன் அர்ச்சகரான ஸ்ரீஶேஷகோபாலன் அவர்களுக்கும், காஞ்சீபுரத்திலிருந்து வந்து உத்ஸவத்தை நடத்தியருளிடும் ஸ்ரீதேவப்பெருமாளின் பட்டாச்சார்யர் ஆன இவ்வூர் தௌஹித்ரர் ஸ்ரீமதுபயவே ஸ்ரீவத்ஸ பட்டருக்கும், மற்றும் வில்லூர் எம்பெருமானுடைய அடியார்களான ஸ்ரீமான்கள் ஸ்ரீதரன் ஸ்வாமி, ராஜாமணி ஸ்வாமீ முதலிய **ஊர்ப்பெருமக்கள் அனைவருக்கும்** அடியேனுடைய நன்றிகளும் நல் வணக்கங்களும்.

## 10. ஸங்கமம் ஆகும் இடம்

இன்று நம் ஸம்ப்ரதாயத்திலே க்ரந்த சதுஷ்டயத்துக்கும் இவருக்கு இன்னாரிடம் இருந்து இதன் உபதேஶம் வந்தது. அவருக்கு அன்னாரிடம் இருந்து இதன் உபதேஶம் வந்தது என்று தொடர்ச்சியாக விரிவான ஜ்ஞானபரம்பரையின் அனுஸந்தானத்துடன் காலக்ஷேபம் நடத்தும் ஆசார்யர்கள் மிகக் குறைந்துவிட்ட நிலை ஏற்பட்டு விட்டது. ஆனாலும் அப்படி இந்தக் கொடிய

*கலியிலும் குறை சொல்ல முடியாதபடிப் பாலைவனச்சோலைகள் போலத் திகழும் குருபரம்பரைகளை உருவாக்கியவர் ஸ்ரீமதண்ணயார்யமஹாதேஶிகன்.*

*நிகழும் ப்லவ வர்ஷம் ஆடி மாதம் 19-ஆம் தேதி (04-08-2021) புதன்கிழமை ஸ்ரீம்ருகஶீர்ஷ நக்ஷத்திரத்தன்று அந்த மஹாஸ்வாமியின் 232-ஆவது திருநக்ஷத்ரம். (அன்றே நம் ஸ்ரீயஜ்ஞும் ஸ்வாமியின் ஆசார்யரும் பிதாமஹரும் ஆன யஜ்வா ஸ்வாமியின் 132-ஆவது திருநக்ஷத்ரமும். ஸ்ரீமதண்ணயார்ய மஹாதேஶிகனே தான் நிலவுலகில் க்ருஹஸ்தாஶ்ரமத்திற்கு உரிய அக்னி ஹோத்ரம், ஸோமயாகம் போன்றவைகளையும் அனுஷ்டித்து அக்னியில் திகழும் ஹயக்ரீவனை ஆராதிக்காது இழந்துவிட்ட குறைதீரத் தனது நூற்றாண்டு நிறைவில் மீண்டும் நாவல்பாக்கத்திலே தான் அவதரித்த அதே திருவம்ஶத்திலே அதே ஆடி ம்ருகஶீர்ஷத்திலே யஜ்வா ஸ்வாமியாக அவதரித்து அக்னி ஹோத்ரம், ஸோமயாகம் முதலியவற்றை அனுஷ்டித்து நிறைவடைந்தாரோ என்று கூறும்படி யஜ்வா ஸ்வாமியின் அவதாரம் அமைந்தது என்பர் ஆன்றோர்.)*

*அப்படிப்பட்ட பொன்னாளில் இந்த நிறைவு ஸஞ்சிகையை ப்ரகாஶனம் செய்து ப்ரதிபிம்பலஹரீ வெளியீட்டை நிறைவு செய்து ஸ்ரீமதுபயவே. யஜ்ஞும் ஸ்வாமியின் ஆசார்யர்களின் திருமுடிகளும், அடியேனுடைய ஆசார்யர்களின் திருமுடிகளும் ஒன்றிடும் ஸ்ரீமதண்ணயார்யமஹாதேஶிகனின் திருவடித்தாமரைகளில் இதை அர்ப்பணித்து தன்யனாகிறேன்.*

## *11. நிறைவு ஶ்லோகம்*

**अण्णयगुरुजन्मदिने पूर्णं कृत्वा प्रकाशयन् खगखे ।**
**प्रतिबिम्बलहर्यास्सन्मुद्रापणमस्मि धन्यजन्माऽहम् ।।**

வில்லூர் நடாதூர் ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸனம்
ஶாஸ்த்ரஸாஹிதீவல்லப ராஷ்ட்ரபதி ஸம்மானித
**Dr. V.S. கருணாகரதாஸன்,** B.E.(Mechanical), M.A.(Sanskrit),Ph.D.,
(ஆஸ்தான வித்வான்,
ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் ஆஶ்ரமம்)

"ஸ்ரீநிதி கருணா"
எண் 6, பாரதியார் தெரு,
சிவகாமி நகர்,
கௌரிவாக்கம்,
சென்னை - 600 073.
கைத்தொலைப்பேசி எண் : 93839 46438

10-07-2021





**ஶ்ரீமதுபயவே வில்லூர் நடாதூர் ஶ்ரீபாஷ்யஸிம்ஹாஸனாதிபதி ஸாஹித்ய வ்யாகரண வாசஸ்பதி**

**வேங்கட*ஶே*ஷார்ய மஹாதே*ஶி*க ஸ்வாமி (1855-1934)**

|| श्रीः ||

|| श्रीमते रामानुजाय नमः ||

# || प्रतिबिम्बलहरी ||

# || अथ नवमं शतकम् ||

## || तत्र प्रथमं दशकम् ||

திருவாய்மொழி – ஒன்பதாம் பத்து – முதல் திருவாய்மொழி

**கொண்டபெண்டிர்**

**திருவாய்மொழிப் பாவகை – அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

**प्रतिबिम्बलहरीवृत्तम् – शार्दूलविक्रीडितम्**

இத்திருவாய்மொழியில் காட்டப்படும் பண்பு – அனைவருக்கும் ஆபத்தில் உதவிடும் ஒரே உறவான தன்மை

**एतद्दशकप्रतिपाद्यगुणविशेषः – सर्वेषामापद्येकबन्धुत्वम्**

**|| सङ्गतिमणिमाला ||**

**(मालिनी)**

भगवत इति दास्यात् तस्य भक्ताङ्घ्रिदास्यं
वरमिति कथयन् तत्तस्य मूलं प्रसादः ।
भगवत इह गोप्ता कश्चिदन्यो न तस्मा–
दुपदिशति शठारिः कृष्ण एवेति तत्त्वम् ।।

1. கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை
எண்டிசையும் கீழும் மேலும் முற்றவும் உண்ட பிரான்
தொண்டரோமாய் உய்யலல்லால் இல்லை கண்டீர் துணையே.

★युष्मच्चित्तगृहीतदारसुतसम्बन्धिस्ववंश्येतरे–
ष्वर्थालोकनिबन्धनादरमृते स्नेहो न रक्षाऽन्यथा ।
अष्टाशाश्च तथाऽध ऊर्ध्वमखिलं संभुक्तवत्स्वामिनः
नोज्जीवेमहि दास्यमेत्य यदि न ह्यन्योऽस्ति संरक्षकः ।।

2. துணையும் சார்வும் ஆகுவார்போல் சுற்றத்தவர் பிறரும்
அணைய வந்த ஆக்கம் உண்டேல் அட்டைகள் போற் சுவைப்பர்
கணையொன்றாலே ஏழ்மரமும் எய்தவெம் கார்முகிலைப்
புணையென்றுய்யப் போகலல்லால் இல்லை கண்டீர் பொருளே.

साहाय्याश्रयदा भवन्त इव ते ते बान्धवाश्चाऽपरे
नेदिष्ठा यदि संपदस्ति सुसुस्वादा जलूका यथा ।
सप्ताप्येकशरेण नीलजलदं मे विद्धवन्तं नगान्
नास्त्यर्थः प्लव इत्युपेत्य यदि नासक्तिर्निजोज्जीवने ।।

3. பொருள்கை யுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென்று ஏற்றியெழுவர்
இருள்கொள் துன்பத்தின்மை காணில் என்னே! என்பாரும் இல்லை
மருள்கொள் செய்கை அசுரர் மங்க வடமதுரைப் பிறந்தார்க்கு
அருள் கொளாளாய் உய்யலல்லால் இல்லை கண்டீர் அரணே.

---

★युष्माभिस्सुगृहीतदारसुतसम्बन्धिस्ववंश्याः परे
दृष्टार्थाप्तिनिबन्धनादरयुताः स्निग्धा न केऽप्यन्यथा ।'' इति च पाठान्तरम् ।

हस्तेऽर्थेषु चरत्सु मङ्गलमिति स्तुत्वा हृतार्थाः प्रयान्ति-
अज्ञानावहदुःखदैन्यसमये किंवादिनोऽप्यत्र नो ।
क्लृप्ताज्ञानदकृत्यदैत्यहननोदङ्माधुरस्वामिनः
कारुण्याश्रयदास्यजीवनमृते नास्त्येव रक्षास्पदम् ॥

4. அரணம் ஆவரற்ற காலைக்கென்றென்று அமைக்கப் பட்டார்
இரணம் கொண்ட தெப்பராவர் இன்றியிட்டாலும் அஃதே
வருணித்து என்னே? வடமதுரைப் பிறந்தவன் வண்புகழே
சரணென்று உய்யப் போகலல்லால் இல்லை கண்டீர் சதிரே.

लुप्तार्थे समये सुरक्षकतयाऽऽयत्तीकृता बान्धवाः
दभ्रा एव तदोत्तमर्णतुलिता यान्त्येतदेवान्यथा ।
तत्प्रस्तुत्य किमौत्तराशमधुराजातस्य भव्या गुणाः
रक्षार्था इति जीवने प्रयतनं कार्यं न तादृक् परम् ॥

5. சதுரமென்று தம்மைத்தாமே சம்மதித்து இன்மொழியார்
மதுரபோகம் துற்றவரே வைகி மற்றொன்று உறுவர்
அதிர்கொள் செய்கை அசுரர் மங்க வடமதுரைப் பிறந்தார்க்கு
எதிர்கொளாளாய் உய்யலல்லால் இல்லை கண்டீர் இன்பமே.

स्वेनैव स्वमतीव कार्यचतुरंमन्यास्समाधुर्यवाक्-
स्त्रीणामीप्सितभोगपूरितहृदो गच्छन्त्यतोऽन्यत् क्रमात् ।
भूकंपावहकृत्यदैत्यहननोदङ्माधुरस्वामिनो
हित्वा पथ्यभिगन्तृदास्यकरणान्नो सौख्यमुज्जीवनात् ॥

6. இல்லை கண்டீர் இன்பம் அந்தோ! உள்ளது நினையாதே
தொல்லையார்கள் எத்தனைவர்? தோன்றிக் கழிந்தொழிந்தார்
மல்லை மூதூர் வடமதுரைப் பிறந்தவன் வண் புகழே
சொல்லி உய்யப்போகலல்லால் மற்றொன்றில்லை சுருக்கே.

**नैवाहो! सुखमन्यदेतदविचिन्त्यर्तं कति प्राक्तनाः**
**उत्पन्नाश्च विनाशिताश्च बहवो जातस्य संपद्भुवि ।**
**प्रत्नायां ज्वलितोत्तराशमधुरापुर्यां तु दिव्यान् गुणान्**
**उक्त्वोज्जीवनमन्तरेण न परं ह्युक्तस्त्वयं सङ्ग्रहः ॥**

7. மற்றொன்றில்லை சுருங்கச் சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும்
சிற்றவேண்டா சிந்திப்பே யமையும் கண்டீர்கள் அந்தோ!
குற்றமன்று எங்கள் பெற்றத் தாயன் வடமதுரைப் பிறந்தான்
குற்றமில் சீர்கற்று வைகல் வாழ்தல் கண்டீர் குணமே.

**माऽऽयासोऽत्वलमेव चिन्तनमिदं स्पष्टं बत क्ष्मातले**
**नास्त्यन्यन्निखिलात्मनां सुविततेऽवादिष्म संक्षेपतः ।**
**नैवावद्यमिहोत्तराशमधुराजातस्य गोश्रीयुजो**
**गोपालस्य हि नो गुणोऽनघगुणान् संकीर्त्य नित्यं स्थितिः ॥**

8. வாழ்தல் கண்டீர் குணம் இது அந்தோ! மாயவன் அடிபரவி
போழ்து போகவுள்ளகிற்கும் புன்மை இலாதவர்க்கு
வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் வன்புகழே
வீழ்துணையாப் போம் இதினில் யாதும் இல்லை மிக்கதே.

सानन्दस्थितिरेष एव हि गुणो हन्तोत्कटस्याङ्घ्रिसं-
स्तुत्या कालविनोदनेच्छुमनसां स्पष्टानवद्यात्मनाम् ।
भोगोपायतयोत्तराशमधुराजातस्य दिव्या गुणा
आशास्याश्रयताश्रया इति धियो नैकोऽप्युपायोऽधिकः ॥

9. யாதுமில்லை மிக்கதனில் என்றென்று அதுகருதிக்
காதுசெய்வான் கூதைசெய்து கடைமுறை வாழ்க்கையும் போம்
மாதுகிலின் கொடிக்கொள் மாட வடமதுரைப் பிறந்த
தாதுசேர்தோள் கண்ணனலல்லால் இல்லை கண்டீர் சரணே.

तस्मादभ्यधिकं न किंचिदिति तच्चित्तेऽभिलाष्य श्रवस्-
संस्कारे श्रवसोर्भिदेव विगलत्प्राक्छिन्नभोगोऽप्यतः ।
*जातं श्रीतगृहोत्तराशमधुरायामुच्चपट्टध्वजैः
कृष्णं माल्यविभूषितांसकमृते नास्त्येव रक्षाकरः ॥

10. கண்ணனல்லாலில்லை கண்டீர் சரணது நிற்க வந்து
மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்
திண்ணமா நும்முடைமை யுண்டேல் அவனடி சேர்ந்துய்ம்மினோ
எண்ணவேண்டா நும்மதாதும் அவனன்றி மற்றில்லையே.

श्रीकृष्णं हि विनैव नास्ति शरणं तत्सिद्धये चिन्तयन्
भूभारोद्धृतिमौत्तराशमधुरामेत्यावतीर्णोऽभवत् ।
युष्मत्स्वं यदि तत् समर्प्य पदयोस्तस्मै दृढं जीवत
युष्मत्स्वं निखिलं ततोऽन्यदिह न ह्यत्रास्तु चिन्ताऽपि मा ॥

---

*अत्र यतिभङ्गभीरूणां कृते ''जातं श्रीतगृहोत्तराशमधुरापुर्युच्चपट्टध्वजैः'' इति पाठः ॥

11. ஆதுமில்லை மற்றவனில் என்றதுவே துணிந்து
தாதுசேர்தோள் கண்ணனைக் குருகூர் சடகோபன் சொன்ன
தீதிலாத ஒண்டமிழ்களிவை ஆயிரத்துள் இப்பத்தும்
ஓதவல்ல பிராக்கள் நம்மை ஆளுடையார்கள் பண்டே.

*(द्रमिडोपनिषत्तात्पर्यरत्नावलीश्लोकः)*

*आपद्बन्धुत्वकीर्त्या दृढमतिजननाद्वैत्यनाशाय भूमौ*
*जातत्वादुत्तरस्यां पुरि मधुरपदालङ्कृतायां दयाब्धेः।*
*बन्धोःकृष्णस्य पादाश्रयणमिह विना नो सहायः पुमर्थो*
*रक्षासामर्थ्यहानेर्भविन इति हितं कारिसूनुर्बभाषे ॥*

॥ प्रतिबिम्बलहरीश्लोकः ॥

नैवान्यत्तदपेक्षयास्ति किमपीहेत्यध्यवस्यैव तत्
कृष्णं स्रग्धरदोष्कमेत्य कुरुकाराजत्–शठारीरितम् ।
निर्दोषं दशकं सहस्रगमिदं सद्भाविडीनां गिरां
शक्ता अध्ययने महोपकृतिनः प्रागेव मत्स्वामिनः ॥

॥ इति नवमशतके प्रथमं दशकम् ॥

॥ श्रीमते वेङ्कटशेषार्यमहादेशिकाय नमः ॥



## ।। अथ नवमशतके द्वितीयं दशकम् ।।

## ஒன்பதாம் பத்து – இரண்டாம் திருவாய்மொழி

## பண்டை நாளாலே

**திருவாய்மொழிப் பாவகை – எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்**

## प्रतिबिम्बलहरीवृत्तम् – स्रग्धरा

இத்திருவாய்மொழியில் காட்டப்படும் பண்பு –
தொன்மைக்காலத்திலிருந்தே அருள் புரிந்து வரும் தன்மை

एतद्दशकप्रतिपाद्यगुणविशेषः – चिरकृतकरुणत्वम् ।

### ।। सङ्गतिमणिमाला ।।

(मालिनी)

यदि निरुपधिकोऽयं बन्धुरस्यैव सर्वाः
उचितमिति तु कर्तुं तास्सपर्यास्स पश्यन् ।
चिरकृतशयनं तं तिन्त्रिणीग्राममध्ये
भवति किमिति चार्तस्त्वेकरूपं शयालोः ।।

1. பண்டை நாளாலே நின் திருவருளும்
பங்கயத்தாள் திருவருளும்
கொண்டு நின்கோயில் சீய்த்துப் பல்படிகால்
குடிகுடிவழி வந்தாட்செய்யும்
தொண்டரோர்க்கு அருளிச் சோதிவாய் திறந்துன்
தாமரைக் கண்களால் நோக்காய்
தெண்டிரைப் பொருநல் தண்பணை சூழ்ந்த
திருப்புளிங்குடிக் கிடந்தானே!

स्वच्छोर्म्यास्ताम्रपर्ण्याः हिमतटवृतिमत्तिन्त्रिणीग्रामशायिन्!
प्राक्काले त्वत्कृपां श्रीसरसिजनिलयाश्रीकृपां चाभ्युपेत्य ।
*त्वद्देहं मार्जयित्वा सविधि च कुलपारंपरीदास्यभाजां
दासानां नः कृपाकृद्विवृतसुवदनः पश्य तेऽक्ष्यंबुजाभ्याम् ॥

2. குடிக் கிடந்து ஆக்கம் செய்து நின் தீர்த்த
வடிமைக்குக் குற்றேவல் செய்துன்பொன்
அடிக்கடவாதே வழிவருகின்ற
அடியரோர்க்கு அருளி நீ யொருநாள்
படிக்களவாக நிமிர்த்த நின்பாத
பங்கயமே தலைக்கணியாய்
கொடிக்கொள் பொன்மதிள்சூழ் குளிர்வயல்சோலைத்
திருப்புளிங்குடிக் கிடந்தானே!

हेमोत्केतूच्चसालोपवनशिशिरभूतिन्त्रिणीग्रामशायिन्!
कुल्यो भूत्वाभिलष्याप्यतिशुचि भवतो दास्यमेत्यान्तरङ्गम् ।
त्वद्रम्याङ्घ्री न हित्वा क्रमसरणिजुषां नः कृपाकृत्कटाक्षात्
क्ष्मामादण्डेन तुल्यं कुरु पदकमलं भूषणं ह्युत्तमाङ्गे ॥

3. கிடந்த நாள் கிடந்தாய் எத்தனை காலம்
கிடத்தி? உன் திருவுடம்பசைய
தொடர்ந்து குற்றேவல் செய்து தொல்லடிமை
வழிவரும் தொண்டரோர்க்கருளி
தடங்கொள் தாமரைக் கண்விழித்து
நீ எழுந்துன் தாமரை மங்கையும் நீயும்
இடங்கொள் மூவுலகும் தொழ விருந்தருளாய்
திருப்புளிங்குடிக் கிடந்தானே!

---

*अत्र यतिभङ्गभीरूणां कृते ''त्वद्देहं भार्जयित्वा सविधि च कुलतः किङ्करत्वं श्रितानां' इति पाठः ॥

## ।। अथ दसमशतके नवमं दशकम् ।।

## பத்தாம் பத்து — ஒன்பதாம் திருவாய்மொழி

### சூழ்விசும்பு

### திருவாய்மொழிப் பாவகை – கலிவிருத்தம்

### प्रतिबिम्बलहरीवृत्तम् – मन्दाक्रान्ता

இத்திருவாய்மொழியில் காட்டப்படும் பண்பு – அர்ச்சிராதி கதியில் அடியவர்களை வழி நடத்துபவர் தலைவனாகத் திகழும் தன்மை

एतद्दशकप्रतिपाद्यगुणविशेषः – सुखार्चिर्मुखसरणिमुखत्वम्

### ।। सङ्गतिमणिमाला ।।

(वसन्ततिलका)

एवं मुनिस्स्वपरभक्तिदशानुभूतिः
मुक्तस्य भोगविषये परमां पिपासाम् ।
उत्पादयन्नयति वह्निमुखाध्वमुख्ये
मां कुम्भघोण इति भावनयेति गोपम् ।।

1. சூழ்விசும்பணிமுகில் தூரியம் முழக்கின
ஆழ்கடல் அலைதிரை கையெடுத்தாடின
ஏழ்பொழிலும் வளமேந்திய என்னப்பன்
வாழ்புகழ் நாரணன் தமரைக் கண்டுகந்தே.

व्याप्ताभ्रालङ्कृतिजलधरास्तूर्यघोषानघुष्यन्
अब्धिर्वीचीकरनिकरमुद्धृत्य निम्नो ननर्त ।
सप्तद्वीपी व्यधरदुपदासंपदं मत्सुबन्धोः
दासान् मोदात् स्थिरगुणनिधेर्वीक्ष्य नारायणस्य ॥

2. நாரணன் தமரைக் கண்டுகந்து நன்னீர்முகில்
பூரண பொற்குடம் பூரித்தது உயர்விண்ணில்
நீரணி கடல்கள் நின்றார்த்தன நெடுவரைத்
தோரணம் நிரைத்து எங்கும் தொழுதனர் உலகே.

दासान् मोदात् शुचिजलधरा वीक्ष्य नारायणस्य
स्वार्णन् पूर्णान् *नभसि च घटान् पूरयामासुरुच्चैः ।
स्थित्वाऽम्भोलङ्कृतजलधयो घोषयन्नद्रिदीर्घान्
नेमुर्लोका नभसि परितः तोरणान् सन्निबद्ध्य ॥

3. தொழுதனர் உலகர்கள் தூபநல் மலர்மழை
பொழிவனர் பூமி அன்றளந்தவன் தமர்முன்னே
எழுமின் என்றிருமருங்கிசைத்தனர் முனிவர்கள்
வழி இது வைகுந்தர்க்கென்று வந்தெதிரே.

नेमुर्लोका नभसि मुमुचुर्धूपसत्पुष्पवृष्टिं
दासानां धुर्युपरि च पुरा पादविक्रान्तभूमेः ।
पार्श्वद्वन्द्वेऽप्यनघमुनयोऽप्यत्र वर्धध्वमित्या–
गत्याऽग्रे संजगुरयमिहाध्वेति वैकुण्ठभाजाम् ॥

---

* ''वियति कलशान् पूरयामासुरुच्चैः ॥'' इति पाठान्तरम् ।

4. எதிரெதிர் இமையவர் இருப்பிடம் வகுத்தனர்
கதிரவர் அவரவர் கைந்நிரை காட்டினர்
அதிர்குரல் முரசங்கள் அலைகடல் முழக்கொத்த
மதுவிரிதுழாய்முடி மாதவன் தமர்க்கே.

**माध्वीपूर्णप्रसवतुलसीमौळिमन्माधवस्य**
**स्वीयानां धुर्युपगतसुरा विश्रमौकांसि तेनुः ।**
**तेजोवन्तस्फुटमनिमिषा दर्शयन्तः स्वहस्तान्**
**अत्यक्रामन् मुखरमुरजा वीचिमत्सिन्धुघोषम् ॥**

5. மாதவன் தமரென்று வாசலில் வானவர்
போதுமின் எமதிடம் புகுதுக என்றலும்
கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்
வேதநல் வாயவர் வேள்வியுள் மடுத்தே.

**एते स्वीया इति पथि गता माधवस्येति देवेष्–**
**वप्यायाताः प्रविशत मम स्थानमित्यर्थिषूच्चैः ।**
**गीताः सूच्चैः कुशलगरुडैः किन्नराश्चाप्यगायन्**
**वेदश्लाघ्याननबुधगणा यागमन्तस्समर्प्य ॥**

6. வேள்வியுள் மடுத்தலும் விரைகமழ்நறும்புகை
காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் இசைத்தனர்
ஆண்மின்கள் வானகம் ஆழியான் தமரென்று
வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர் மகிழ்ந்தே.

अन्तर्मुक्ते सवनजफले सौरभोद्गन्धिधूपैः
सर्वत्रासन् दिविमुखरिताः काहलाश्शङ्खमिश्राः ।
कान्त्या कान्तेक्षणयुवतयः मङ्गलानि प्रमोदात्
पेठुः स्वर्गाद्यवत भुवनं चक्रिदासा इतीत्थम् ॥

7. மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும்
தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர் தொடுகடல்
கிடந்தவென் கேசவன் கிளரொளி மணிமுடி
குடந்தையென் கோவலன் குடியடியார்க்கே.

देवीष्वेवं सवसु मरुतो मङ्गलाशासनौत्का–
स्त्वन्वेतास्संस्तुतिमरचयन् शायिनः केशवस्य ।
निम्नेऽब्धौ द्युत्मणिमकुटवत्कुम्भघोणेशितुर्मे
गोपालस्यास्वकुलभवनं दासभावं गतानाम् ॥

8. குடியடியாரிவர் கோவிந்தன் தனக்கென்று
முடியுடை வானவர் முறைமுறை எதிர்கொள்ள
கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகினர்
வடிவுடை மாதவன் வைகுந்தம் புகவே.

गोविन्दस्यान्वयसरणितो दासभूता इतीमे
प्रत्युद्गच्छत्यनघमकुटे स्वस्वदेशेऽमरौघे ।
उच्चैः दीव्यद्ध्वजवरणवत् गोपुरं चाभियाताः
वैकुण्ठं श्रीसुभगवपुषो माधवस्य प्रवेष्टुम् ॥

9. வைகுந்தம் புகுதலும் வாசலில் வானவர்
வைகுந்தன் தமரெமர் எமதிடம் புகுதென்று
வைகுந்தத்தமரரும் முனிவரும் வியந்தனர்
வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே!

**वैकुण्ठेऽस्मिन्नमरनिवहा गोपुरस्थाः प्रविष्टे**
**वैकुण्ठीयाः प्रविशत पदं स्वामिनो! नोऽस्मदीयम् ।**
**वैकुण्ठस्था दधति मुनयस्सूरयो विस्मयं "श्री-**
**वैकुण्ठाप्तिः प्रकृतिजनुषां भाग्य"मेवेत्यपूर्वम् ॥**

10. விதிவகை புகுந்தனரென்று நல்வேதியர்
பதியினில் பாங்கினில் பாதங்கள் கழுவினர்
நிதியுநற் சுண்ணமும் நிறைகுட விளக்கமும்
மதிமுகமடந்தையர் ஏந்தினர் வந்தே.

**अस्मद्भाग्यात् परममविशन्तेति सद्वेदवेद्याः**
**स्वीये स्थाने क्रममजहतः क्षालयामासुरंघ्रिम् ।**
**श्रीमच्चूर्णं निधिमपि घटं तीर्थपूर्णं प्रदीपं**
**पूर्णेन्द्वास्यास्सुरयुवतयोऽभ्येत्य दध्रुः कराग्रे ॥**

11. வந்தவர் எதிர்கொள்ள மாமணி மண்டபத்து
அந்தமில்பேரின்பத்து அடியரோடு இருந்தமை
கொந்தலர்பொழில் குருகூர்ச் சடகோபன் சொல்
சந்தங்கள் ஆயிரத்திவை வல்லார் முனிவரே.

*(द्रमिडोपनिषत्तात्पर्यरत्नावलीश्लोकः)*

*स्वामित्वात् श्रीशनारायण इति यशसा विक्रमाद्विष्टपानां*
*श्रीमत्वाच्चक्रवत्वात् जलनिधिशयनाच्चापि गोविन्दभावात् ।*
*वैकुण्ठस्वामिभावादपि च निजजनानर्चिराद्याख्यगत्या*
*स्वं लोकं प्रापयेच्छ्रीपतिरिति कथयां श्रीशठारिर्बभूव ॥*

॥ प्रतिबिम्बलहरीश्लोकः ॥

तस्मिन् प्रत्युद्गतवति मणिश्रीमहामण्डपे सं–
वासप्राप्तौ निरवधिमहानन्ददासैस्सहैव ।
स्फायत्गुच्छोपवनकुरुकासच्छठद्विट्सहस्रे
छन्दोरूपे त्विह तु दशकाभ्यासिनस्स्युर्मुनीन्द्राः ॥

॥ इति दशमशतके नवमं दशकम् ॥

॥ श्रीमते वेङ्कटशेषार्यमहादेशिकाय नमः ॥



## ।। अथ दशमशतके दशमं दशकम् ।।

### பத்தாம் பத்து – பத்தாம் திருவாய்மொழி

### முனியே! நான்முகனே!

**திருவாய்மொழிப் பாவகை – கலிநிலைத்துறை**

### प्रतिबिम्बलहरीवृत्तम् – शार्दूलविक्रीडितम्

**இத்திருவாய்மொழியில் காட்டப்படும் பண்பு – முத்தி அளிப்பவனாகவும் முத்தி அடைந்தவர்களுக்கு இன்சுவையாகவும் இருக்கும் தன்மை**

**एतद्दशकप्रतिपाद्यगुणविशेषः – मोक्षदत्वं मुक्तभोग्यत्वञ्च**

**।। सङ्गतिमणिमाला ।।**

**(वसन्ततिलका)**

**अग्न्यादिमार्ग इति सप्रणयं स्वयात्रां**
**कृत्वा पदेऽथ परमे वसतिं समाधौ ।**
**दृष्ट्वाऽथ विच्युतिमवाप्य ततोऽतिखिन्नः**
**तं मोक्षदं नुवति मुक्तजनाभिभोग्यम् ।।**

1. முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே! என்கள்வா!
தனியேன் ஆருயிரே! என்தலைமிசையாய் வந்திட்டு
இனி நான் போகலொட்டேன் ஒன்றும் மாயம் செய்யே
லென்னையே.

सृष्ट्यर्थं मनने स्थितास्थितचतुर्वक्त्र! त्रिणेत्रोपकृत्!
मद्बिम्बाधरनीलनूतनमणे! पद्माक्ष! मद्वञ्चक! ।
पूर्णप्राण! ममैककस्य शिरसोऽप्युच्चैरुपेत्य स्थितं
सम्मन्येऽहमितो न गन्तुमपि मा कार्षीस्त्वमायां मयि ॥

2. மாயம் செய்யேல் என்னை உன் திருமார்வத்து மாலை நங்கை
வாசம் செய்யும் பூங்குழலாள் திருவாணை நின் ஆணை கண்டாய்
நேசம் செய்துன்னோடென்னை உயிர் வேறின்றி ஒன்றாகவே
கூசம் செய்யாது கொண்டாய் என்னைக் கூவிக்கொள்ளாய் வந்தந்தோ.

मा मा वञ्चय मालयेव भवतो वक्षस्थया पूर्णया
सौरभ्यावहरम्यकुन्तलभृता लक्ष्म्या त्वयाऽहं शपे ।
त्वं त्वा स्नेहमृते घृणां मम तवाप्यैक्येन चात्मापृथक्-
भावादङ्ग्यकरोः किलैत्य बत! मामाहूय च स्वीकुरु ॥

3. கூவிக் கொள்ளாய் வந்தந்தோ என்பொல்லாக் கருமாணிக்கமே!
ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலால் அறிகின்றிலேன் நான்
மேவித்தொழும் பிரமன் சிவன் இந்திரன் ஆதிக்கெல்லாம்
நாவிக் கமல முதற்கிழங்கே! உம்பர் அந்ததுவே.

आदृत्याश्रितपद्मभूशिवसुरेन्द्राद्याखिलानां पुरा
बीजं नाभिसरोजकन्द परमस्थानां च तत्तादृशम् ।
एकालम्बनयष्टिमात्मविषये जाने न च त्वां विनो-
पेतो मे क्षतनीलरत्न! बत! मामाहूय च स्वीकुरु ॥

4. உம்பர் அந்தண் பாழேயோ அதனுள் மிசை நீயேயோ
அம்பர நற்சோதி அதனுள் பிரமன் அரன்நீ
உம்பரும் யாதவரும் படைத்த முனிவன் அவன்நீ
எம்பரம் சாதிக்கலுற்று என்னைப் போர விட்டிட்டாயே.

**ऊर्ध्वस्थोज्ज्वलशीतलप्रकृतितन्मध्यस्थवर्यः त्वमे–**
**वाहो! खोज्वलतेजसि त्वमिह सन् ब्रह्मा हरस्त्वं सह ।**
**उत्कृष्टैरमरैरनादिसकलस्रष्टा मुनिस्त्वं स मे**
**भारे वोढृतया विचिन्त्य किमु मां संसारचारेऽक्षिपः ॥**

5. போர விட்டிட்டு என்னை நீ புறம் போகலுற்றால் பின்னை யான்
ஆரைக் கொண்டு எத்தையந்தோ எனதென்பதென் யானென்பதென்
தீர இரும்புண்ட நீரது போல என் ஆருயிரை
ஆரப் பருக எனக்கு ஆராவமுதானாயே.

**त्वत्तो मां त्वमपोह्य चिन्तयसि चेत् गन्तुं बहिस्तर्ह्यहं**
**कं वाऽश्रित्य किमत्र हन्त किमहं वाच्यं मदीयं च किम् ।**
**शान्त्यै तप्यदयस्सुपीतजलवत् श्लाघ्यात्मनाऽऽतृप्ति मां–**
**पातुं मे पिबतोऽप्यतृप्तिजनकापूर्वामृतीभूत! मे ॥**

6. எனக்காராவமுதமாய் எனதாவியை இன்னுயிரை
மனக்காராமை மன்னி உண்டிட்டாய் இனி உண்டொழியாய்
புனக்காயா நிறத்த! புண்டரீகக் கண் செங்கனிவாய்
உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு அன்பா! என் அன்பேயோ!

स्वक्ष्माभादतसीद्युतेऽब्जनयन! श्रीरक्तबिबाधर!
त्वद्योग्यात्मवपुर्गुणाब्जनिलयस्त्रीप्रेमवन्! स्नेह! मे ।
भृत्वाऽतृप्तिकरामृतं मम मम प्राणान् स्वमप्यान्तरं
भुक्त्वा तृप्तियुतोऽन्वभूस्स्थिरमितोऽप्यच्छेदतो भुङ्क्ष्व माम् ॥

7. கோல மலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ!
நீல வரை இரண்டு பிறை கவ்வி நிமிர்ந்ததொப்பக்
கோல வராகம் ஒன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்!
நீலக் கடல்கடைந்தாய்! உன்னைப் பெற்றினிப் போக்குவனோ!

सौन्दर्योज्वलपङ्कजोदितवधूस्नेहाधिकस्नेह! मे
पार्श्वस्थेन्दुकलाद्वयोत्थितमहानीलाचलश्रीजुषा ।
स्वामिन्नेकलसद्वराहवपुषा दंष्ट्रा गृहीतक्ष्म!
त्वां लब्ध्वाऽपि कथं त्यजानि मथितानीलार्णवेतः परम्? ॥

8. பெற்றினிப் போக்குவனோ? உன்னை என் தனிப்பேருயிரை
உற்ற இருவினையாய் உயிராய்ப் பயனாய் அவையாய்
முற்ற இம்மூவுலகும் பெருந்தூறாய்த் தூற்றில் புக்கு
முற்றக் கரந்தொளித்தாய் என் முதல் தனி வித்தேயோ!

त्वां लब्ध्वा किमिति त्यजेयमसमं प्राणं महान्तं मम
श्लिष्टात्म द्विविधं च कर्म फलभुक् चात्मा फलं तच्च सन् ।
कृत्स्नैतत्त्रिजगन्महागहनरूप्येतत् प्रविष्टश्च सन्
कृत्स्नं व्याप्य च लीनवन्! जगदुपादानप्रधानैक! मे ॥

9. முதல்தனி வித்தேயோ! முழுமூவுலகாதிக்கெல்லாம்
முதல் தனி உன்னையுன்னை எனைநாள் வந்து கூடுவன்நான்
முதல்தனி அங்குமிங்கும் முழுமுற்றுறு வாழ் பாழாய்
முதல்தனி சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ!

**कृत्स्नैतत्त्रिजगत्प्रभृत्यखिलवस्त्वेकाद्युपादानमा–**
**द्येकं त्वाऽसदृशं कदा सविधतस्त्वामेव भोक्ष्याम्यहम् ।**
**तत्राऽत्राऽसम! कृत्स्न! सर्वग! महामूलप्रकृत्याकृते!**
**मूलातुल्य! समस्तगाऽऽतत विशन् उद्यन्ननन्ताप्यहो! ॥**

10. சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ!
சூழ்ந்ததனில் பெரிய பரநன்மலர்ச்சோதீயோ!
சூழ்ந்ததனில் பெரிய சுடர்ஞான இன்பமேயோ!
சூழ்ந்ததனில் பெரிய என் அவாவறச் சூழ்ந்தாயே.

**सर्वार्थस्थतताधऊर्ध्वगमहानन्तप्रकृत्याकृते!**
**तद्व्याप्याऽपि ततो महोच्चविकसत्सद्ज्ञानमुक्ताकृते! ।**
**तद्व्याप्याऽपि ततो महोज्ज्वलितमत्यानन्ददिव्याकृते!**
**तद्व्याप्याऽपि ततोऽतिशायिमदभीष्टावाप्तये माऽवृणोः ॥**

11. அவாவறச் சூழ் அரியை அயனை அரனை அலற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன் சொன்ன
அவாவில் அந்தாதிகளால் இவை ஆயிரமும் முடிந்த
அவாவில் அந்தாதி இப்பத்தறிந்தார் பிறந்தார் உயர்ந்தே.

## (द्रमिडोपनिषत्तात्पर्यरत्नावलीश्लोकाः)

ब्रह्मेशान्तःप्रवेशात् जलनिधिसुतया सन्निरोद्धव्यभावात्
दिव्यश्रीविग्रहत्वात् अखिलतनुतयाऽतृप्तपीयूषभावात् ।
पद्माबन्धुत्वभूम्युद्धरणकरणतः पुण्यपापेशितृत्वात्
मुक्तेर्दाताऽनुभाव्यो हरिरिति शठजिद्दर्शयन् मुक्तिमाप ॥

एवं स्वानां गतिं व्यध्वजदुरितहरास्थानशङ्कार्हरागं
सुप्रापं भक्तिभाजां बहुविधभजनप्रक्रियं श्रीशठारिः ।
तीव्रोद्योगं स्वदाने स्वजनतनुकृतात्यादरं प्राह चान्ते
स्वेच्छातुष्टं सुखार्चिर्मुखसरणिमुखं मोक्षदं मुक्तभोग्यम् ॥

## ॥ निगमनम् ॥

इत्थं सेव्यं सुभोग्यं शुभसुभगतनुं सर्वभोग्यप्रकृष्टं
श्रेयस्तद्धेतुभूतं प्रपदनसुलभं स्वाश्रितानिष्टजिष्णुम् ।
भक्तच्छन्दानुरक्तं निरुपधिसुहृदं सत्पदव्यां सहायं
श्रीशं प्राह स्वसिद्धेः स्वयमिह करणं स्वप्रबन्धे शठारिः ॥ −1

आद्ये स्वीयप्रबन्धे शठजिदभिदधे संसृतेर्दुस्सहत्वं
द्वैतीयीके स्वरूपाद्यखिलमथ हरेरन्वभूत् स्पष्टदृष्टम् ।
तार्तीयीके स्वकीयां भगवदनुभवे स्फोरयामास तीव्रां
आशां तुर्ये यथेष्टं भगवदनुभावादाप मुक्तिं शठारिः ॥ −2

श्रीमान् सीमातिलङ्घिस्थिरतरकरुणः सर्ववित् सर्वशक्तिः
स्वामी सर्वस्य जन्तोः स्वचरणयुगळस्वीकृतास्माकभारः ।
किं नः कृत्यं स्वहेतोः किमिह न सुलभं का विपत्तिर्भवित्री
कस्यान्यस्याधमर्णा वयमिति विदुषामाह तुङ्गत्वमन्ते ॥ –3

शास्त्रे देहातिरिक्तात्मनि तदधिपतौ तत्प्रसादाद्युपाये
तस्मान्निःश्रेयसाप्तौ तदपचरणतोऽनन्ततापाभिघाते ।
तद्भक्तानां प्रभावे तदुपसदनतः स्वान्तकालुष्यशान्तौ
सारं वेद्यं स्ववेदे सकलमकथयत् सानुकम्पः शठारिः ॥ –4

इत्थं सत्संप्रदायक्रमसमधिगताशेषवर्णार्हवेद–
श्रद्धाशुद्धाशयानामघटयदनघं कौतुकं वेङ्कटेशः ।
संयक्त्वे तस्य साक्षात् शठरिपुरथवा सर्वसाक्षी स साक्षी
सावद्यत्वेऽपि सोढुं प्रभवति भजतामप्रकम्प्यानुकम्पः ॥ –5

शोकः श्लोकत्वमभ्यागत इतिवदतः शुद्धबोधार्णवोद्य–
न्नानाकल्लोलनाथानुभवरसपरीवाहतः श्राव्यवेदात् ।
वेदान्ताचार्यकश्रीबहुमतबहुविद्वेङ्कटेशोद्धृतेयं
रम्या तात्पर्यरत्नावलिरनघगुणा रञ्जनी रङ्गभर्तुः ॥ –6

## ।। प्रतिबिम्बलहरीश्लोकः ।।

आक्रुश्याजहराकृतिं हरिमिह प्रह्वानमौत्कण्ठ्यसं-
शान्त्यै मुक्तसमुत्कतास्तकुरुकाराजच्छठारीरितम् ।
अन्ताद्युक्तमिदं सहस्रमिति संपूर्णं महोत्कण्ठया
त्वन्ताद्युत्कदशोदिता अधिगता जाता इहैवोत्तमाः ।।

।। इति दशमशतके दशमं दशकम् ।।

।। इति दशमशतकं समाप्तम् ।।

।। इति श्रीप्रतिबिंबलहरी संपूर्णा ।।

।। श्रीमते वेङ्कटशेषार्यमहादेशिकाय नमः ।।





ஸ்ரீ அலர்மேல்மங்கா ஸமேத ஸ்ரீ ஸ்ரீநிவாஸன் - திருவேங்கடம்



ஸ்ரீ அனந்தபத்மநாபன் - திருவனந்தபுரம்

|| श्रीः ||

|| श्रीमते रामानुजाय नमः ||

|| श्रीमते वेंकटशेषार्यमहादेशिकाय नमः ||

## श्रीमदुभयवे. विल्लूर्. नडादूर्. श्रीभाष्यसिंहासनाधिपति. साहित्य-व्याकरण-वाचस्पति. श्रीमद्वेंकटशेषार्यमहादेशिकानुगृहीता

# || श्रीपद्मनाभकटाक्षनक्षत्रमाला ||

## (तस्याः द्रविडभाषाऽनुवादः)

[ By *Mahamahopadhyaya, Sastra Ratnakara Darsana Kalanidhi* ***Mullaivasal*** **Dr. R. KRISHNAMURTHY SASTRIGAL,** M.A.,Ph.D. ]

★ ★ ★

वन्दे वेंकटशेषार्यं वात्सल्यादिगुणार्णवम् ।
वात्स्यश्रीवरदाचार्यतनयं करुणानिधिम् ॥

*வாத்ஸல்யம் முதலிய குணங்களின் கடலும், ஸ்ரீவத்ஸகோத்ரத்தவரும் ஆன* ***வரதாசார்ய ஸ்வாமி****யின் குமாரரும், கருணையையே செல்வமாக உடையவரும் ஆன* ***ஸ்ரீவேங்கட ஶேஷார்ய மஹாதேஶிக ஸ்வாமி****யை வணங்குகிறேன்.*

★ ★ ★

कामं कांक्षितसिद्ध्यै प्रथमगुरुं नौमि पद्मनाभमहम् ।
प्राचार्यमण्णयार्यं स्वाचार्यं सुन्दरार्यगुरुवर्यम् ॥ १

*1. எனது அபீஷ்டம் ஸித்திப்பதற்காக ப்ரதம குருவான* ***ஸ்ரீபத்மனாப ஸ்வாமி****யையும், எனது* ***ப்ராசர்யரான அண்ணயார்ய மஹாதேஶிகனை****யும், எனது ஆசார்யரான* ***ஸுந்தரார்ய மஹாதேஶிகனை****யும் துதிக்கிறேன் (வணங்குகிறேன்).*

**भार्गवीप्रभया भ्राजद्वक्षोभागेन भास्वरम् ।**
**भजतामभयोद्युक्तं पद्मनाभमहं भजे ।। २**

*2. தனது மார்பின் வலது பாகத்தில் விளங்குகிற **ஸ்ரீலக்ஷ்மீத்தாயாரின்** ஒளியினால் சிறந்து விளங்குகின்றவரும், தன்னை பஜிப்பவர்களுக்கு அபயத்தைத் தருவதில் தயாராக உள்ளவருமான **ஸ்ரீபத்மனாபரை** ஸேவிக்கிறேன்.*

**श्रीपद्मनाभ! महिते तव सन्निधाने का शक्तिरस्ति मम वर्णमपीह वक्तुम् ।**
**स्तोतुं पुनः किमु दयाजलधे! तवैव काऽपि प्रसक्तिरिह मां मुखरीकरोति ।। ३**

*3. ஹே! பத்மனாபரே! மிகச்சிறந்த உமது ஸன்னிதானத்தில் ஒரு எழுத்துகூடச் சொல்வதற்கு எனக்கு சக்தி என்ன இருக்கிறது? துதி பாடுவது என்பது முடியாது என்று கூறவும் வேண்டுமா? (இருப்பினும் கூட) தயையின் வடிவமான உம்முடைய நெருக்கமானது (பக்தியினால் உண்டானது) இங்கு என்னை நன்கு பேசுபவனாக (துதி பாடுபவனாக) ஆக்குகிறது.*

**पुत्रस्नुषाशयनवाहननेत्रयुग्मपौत्रादिमेषु तव सत्स्वपि तादृशेषु ।**
**को वा न ते सविधमेत्य गुणानवोचत् नाप्लावितस्तव दयाशिशिरैरपाङ्गैः ।। ४**

*4. பிள்ளை, மாட்டுப்பெண், ஶயனம், வாஹனம், இருகண்கள், பேரன் போன்ற பலர் இவ்விதமிருக்கும்போது, உமது ஸன்னிதியில் வந்து, உமது குளுமையான கடைக்கண் பார்வையால் நிரம்பியவர்களாக ஆகி உமது குணங்களை யார்தான் கூறவில்லை? (பலரும் உமது ஸன்னிதியில் உமது தயையால் துதி பாடும் திறமை பெறுகிறார்கள் அல்லவா?)*

*இங்கு :- பிள்ளை - ப்ரஹ்மா, மாட்டுப்பெண் - ஸரஸ்வதீ, ஶயனம் - ஆதிஶேஷன், வாஹனம் - கருடன், இருகண்கள் - ஸூர்யனும், சந்திரனும், பௌத்ரன் - ஶிவபிரான் எனப் பொருள் புரிந்துகொள்ள வேண்டும்.*

**श्रीपद्मनाभ! ललितं तव दिव्यमूर्तिरूपानुरूपमहमाभरणं प्रदित्सुः ।**
**आत्मन्यशक्तिमथ वीक्ष्य करोमि वाचा नक्षत्रगुंभनलसन्नवरत्नमालाम् ।। ५**

*5. ஹே! பத்மனாபரே! உமது லலிதமான (மிகவும் கவர்வதாக உள்ள) திவ்ய ரூபத்தின் அழகிற்குத் தக்காதன ஒரு ஆபரணம் ஸமர்ப்பிக்க எண்ணும் நான், எனக்கு அதற்கான சக்தியின்மையை உணர்ந்து நக்ஷத்ரங்களைக் கோர்த்துப் புதிய நவரத்ன மாலையை வாக்கினால் சொல்கிறேன்; 27 நக்ஷத்ரங்களுடன் பளபளக்கும் பாக்களாலான மாலையைச் செய்கிறேன்.*

आपुर्यदीयलवतः कुलशेखराद्याः श्रीपुष्टि**मश्वयुग**नर्घगजादिहृद्याम् ।
या पुण्यराशिविभवेषु विहारशीला सा पद्मनाभ! तव पातु कटाक्षमाला ॥ ६

*6. அந்த உமது கருணாகடாக்ஷத்தின் லவலேஶத்தினால் குலசேகராழ்வர் போன்றவர்கள் செல்வச்செழிப்பு, குதிரை(**அஶ்விநீ** நக்ஷத்ரத்தை ச்லேடையாகக் குறிப்பிடுகிறார்)யுடன் கூடிய விலையுயர்ந்த யானை போன்ற மனம் கவரும் செல்வங்ளைப் பெற்றார்களோ, எந்த மாலையானது புண்ணியமான ராஶியை (புண்யங்களின் குவியலை) உடையவர்களிடம் ஸஞ்சரிக்கும் ஸ்வபாவமுள்ளதோ, பத்மனாபரே! அந்த உம்முடைய கடாக்ஷமாலை அடியோங்களைக் காப்பாற்றட்டும்.*

त्वामेकदैवतधिया शरणं प्रपन्नं क्षामेतरात्मकरुणा**भरणी**यमेनम् ।
श्रीपद्ममञ्जुलमुखेन्दुविहारहेला श्रीपद्मनाभ! तव पातु कटाक्षमाला ॥ ७

*7. உம்மை மட்டுமே தேவதையாகக் கருதி ஶரணமடைந்தவனும், உமது குறைவற்ற கருணையினால் **பரிக்க**(காப்பாற்ற)த் தக்கவனாகவும் உள்ள இந்த என்னை பத்மனாபரே! சிறந்த தாமரைமலர் போன்ற முகச்சந்திரனில் விளையாடும் தன்மை உடைய உமது கடாக்ஷமாலை காப்பாற்றட்டும். (இங்கு கடாக்ஷத்தினால் '**பரணீய**' என்னும் சொல்லில் **பரணீ** நக்ஷத்ரம் வருகின்றது).*

श्रीपद्मसंभवमुखैरनघैर्मखाशैः या **कृत्तिका**पटधरेण समं मखघ्ना ।
आपद्यते शरणमाश्रितपक्षपाला श्रीपद्मनाभ! तव पातु कटाक्षमाला ॥ ८

*8.* *எந்த கடாக்ஷமாலையானது குற்றமற்ற ப்ரஹ்மா முதலிய வேள்வியில் ஹவிஸ்ஸை உண்பவர்களான, (வேள்வியில் ஆசை உடைய என்றும் பொருள்) தேவர்களாலும்,* ***க்ருத்தி-கா*** *- ஆனையின் தோலாகிய வஸ்திரத்தை - உடுத்தவனான (தக்ஷன் வேள்வியை அழித்ததால்) வேள்வியை அழித்த பரமசிவனுடன் கூடியிருந்து ஶரணமடையப்படுகிறதோ அந்த ஆஶ்ரித பக்ஷத்தைப் (கட்சியைப்) பாதுகாக்கும் உமது கடாக்ஷமாலையானது எம்மைக் காப்பாற்றட்டும்.* **க்ருத்திகா** *என்ற சொல்லில்* **கார்த்திகை** *நக்ஷத்ரம் குறிப்பிடப்படுகிறது.*

आ**रोहिणीं** दिशति संपदमृद्धिमूलां या **रोहिणी**शसुधयेव सदार्द्रशीला ।
तापत्रयप्रशमनोपहितात्मलीला सा पद्मनाभ! तव पातु कटाक्षमाला ।। ९

*9.* *சந்திரனின் அமுதகிரணம் போல் எப்போதும் குளுமையாயிருந்து, தாபத்ரயங்களைப் போக்குவதையே தனது ஸ்வபாவமாகக் கொண்ட எந்த உமது கடாக்ஷமாலை வளமையை அடியாகக் கொண்டு மேலும் மேலும் ஆரோஹணம் (முன்னேற்றத்தை அளிக்கும்) செல்வத்தைத் தருகிறதோ, அந்த கடாக்ஷமாலை எம்மைக் காப்பாற்றட்டும். (***ஆரோஹிணீ** *என்ற சொல்லில்* **ரோஹிணீ** *நக்ஷத்ரம் ஸூசிப்பிக்கப்படுகிறது).*

किं पद्मजात् **मृगशिर**:करतोऽन्यतो वा संपन्नमस्तु कृपणान् कृपणा भजन्ते ।
आपं चतुर्विधपुमर्थमहाफलाय श्रीपद्मनाभ! तव दिव्यकटाक्षमालाम् ।। १०

*10.* *ஸாதாரண ஜனங்கள் ப்ரஹ்மாவிடமிருந்தோ,* ***ம்ருகசிரஸை*** *(சிறந்த மானைக்) கையில் ஏந்திய சிவனிடமிருந்தோ ஸம்பத்தைப் பெறட்டும். ஸாமான்யர்கள் ஸாமான்யர்களை வழிபடட்டும். (ஆனால்) தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களாகிய மஹா பலத்திற்காக நான் உமது திவ்ய கடாக்ஷ மாலையையே ஶரணமடைகிறேன். ஶிவனைக் கூறும் வார்த்தையில்* **ம்ருகசிரக்கரன்** *என்ற சொல்லால்* **மிருகசீர்ஷம்** *என்ற நக்ஷத்ரம் குறிக்கப்படுகிறது.*

**आर्द्रा**पराधमपि मामनुकंपनीयं सार्द्रावलोकनसुधारसवर्षिणीयम् ।
हे पंकजाक्ष! करुणानृतिचन्द्रशाला श्रीपद्मनाभ! तव पातु कटाक्षमाला ।। ११

*11.* பச்சையான (ஆர்த்ரம்) குற்றத்தை உடையவனாகவும், கருணைக்கு இலக்கானவனாகவும் இருக்கும் என்னைத், தாமரைக்கண்ணா ! பத்மனாபா ! ஈரமான பார்வையினால் அமுதத்தினைப் பொழியும் கருணை நடனமாடும் மாளிகைக் கூரையில் அமைந்த திறந்தவெளி மேடை போன்ற உமது கடாக்ஷமாலை காப்பாற்றட்டும். **ஆர்த்ரா (திருவாதிரை)** நக்ஷத்ரம் **आर्द्र**पराध என்ற சொல்லின் முற்பகுதியில் குறிப்பிட்டுள்ளது.

प्राग्जन्मपुण्यविरहात् वसुहीनमेनं वाग्जन्यसंस्तवगुणैरुदयद्विकासम् ।
पापं **पुनर्वसु**युतं विदधात्वसौ मां श्रीपद्मनाभ! तव दिव्यकटाक्षमाला ।। १२

*12.* முன் ஜன்மத்தின் புண்ணியம் இல்லாததால் ஏழையான, செல்வமற்றவனான, (உம்மை)த் துதிப்பது என்ற குணத்தினால் (புண்ணியத்தினால்), லேசாக வளர்பவனாகவும் இருக்கிற பாபியான என்னை ஹே! பத்மனாபா! உமது திவ்ய கடாக்ஷமாலையானது **புனர்வஸு**வுடன் (மறுபடி செல்வங்களை உடையவனாகக்) கூடியவனாகச் செய்யட்டும். இங்கு **புனர்வஸு** என்று நக்ஷத்ரத்தின் பெயர் தெளிவாக உள்ளது.

**पुष्य**त्प्रभापरिचितां पुनरुक्तशीतां हृष्यत्प्रपन्नकुलरक्षणबद्धदीक्षाम् ।
स्वापं विनैव सुखदानमहे विलोलां श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। १३

*13.* நன்றாக வளரக்கூடிய (புஷ்யத்) ஒளியை உடையதும், மிகுந்த குளுமை கொண்டதும், ஶரணமடைந்து ஸந்தோஷம் பெறும் பக்தர்களைக் காப்பாற்றுவதில் முனைந்துள்ளதும், தூக்கமில்லாத இன்பத்தை அள்ளித்தரும் உத்ஸவத்தில் ஈடுபாடு உடையதும் ஆன, உமது கடாக்ஷமாலையைத் தந்து அருள வேண்டும். இங்கு **புஷ்யத்** என்ற தொடரின் ஆரம்பத்தில் **புஷ்ய = பூசம்** என்கிற நக்ஷத்ரம் குறிக்கப்பட்டுள்ளது.

स्वामिन्! सदा करुणया हितया विभास्व**दाश्लेषया** जनितसर्वजनप्रसादाम् ।
श्रीमन्ननन्तपुरदिव्यविमानधामन्! श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। १४

*14.* ஸ்வாமியே! திருவனந்தபுரத்தில் திவ்ய விமானத்தின் விளங்குபவரே! பத்மனாபரே! எப்போதும் கருணையுடன் ஹிதத்தைத் தரும் லக்ஷ்மீயின்

***ஆம்ப்லேஷத்தால்*** *(ஆலிங்கத்தினால்) எல்லா ஆம்ப்ரித ஜனங்களுக்கும் ப்ரஸாதத்தை வழங்கும் உமது கடாக்ஷமாலையைத் தந்து அருள வேணும்.* **ஆம்ப்லேஷ** = ***ஆலிங்கனம்*** *(அல்லது)* **ஆயில்ய** *நக்ஷத்ரம் என்று பொருள்படுகிறது.*

*ஆம்ப்லேஷம் என்ற வார்த்தையில் அருமையான ம்ப்லேஷம் (ச்லேடை) கவியின் சிறப்பைக் காட்டுகிறது.*

**पद्मोद्भवश्च स च भवो मघवा च शास्ता सद्मोपरि स्थितिजुषस्तव संस्तवाशाः ।**
**आपन्निवारणचणां इति यां स्तुवन्ति श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ १५**

*15. ப்ரஹ்மா, மிவன், மகவா* (**मघवा** = *இந்திரன்*) *போன்றவர்கள் உமது விமானத்தின் மேற்புறம் இருந்துகொண்டு உம்மை ஸ்துதிக்கும் ஆசையுள்ளவர்களாக இருக்கின்றனர். பத்மனாபனே! உமது கடாக்ஷமாலையை ஆபத்துக்களைப் போக்குவதில் தலைசிறந்தது என்று கூறுகிறார்கள். அத்தகைய கடாக்ஷமாலையை அருளும். இங்கு* **मघवा** = ***இந்திரன்*** *என்று சொல்லினால் (மகம் என்கிற செல்வம் (அல்லது) யாகங்கள் உடையவன்) கூறப்பட்டாலும்,* **மக** *என்ற முற்பகுதியினால் உலக வழக்கில்* **மகம்** *என்று வழங்கப்படும்* **மகா** *நக்ஷத்ரம் கூறப்படுகிறது.*

**वल्गु त्वदीयपदपद्मरतिं विहाय फल्गुन्यहं व्यधितधीः विषये हि पूर्वम् ।**
**आप्तं श्रमं शमयितुं तमनन्तशायिन्! श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ १६**

*16. மிக அழகான உமது பாதத்தின் ஈடுபாட்டை விட்டுவிட்டு நான் முன்பு உலக விஷயங்களில் - மிக* ***அல்பமான*** *பலன்களில் புத்தியைச் செலுத்தினேன். அதனால் உண்டான ம்ரமத்தைத் தணிப்பதற்காக எனக்கு உமது கடாக்ஷமாலையைத் தந்தருள வேண்டும். அனந்தசயனத்தில் உள்ளவரே! ஸ்ரீபத்மனாபா! இங்கு* **फल्गुनि** *அற்பப்பயனில் என்று பொருள்படும் சொல்லில்* **பல்குனீ (பூர்வபல்குனீ = பூரம்)** *என்ற நக்ஷத்ரப் பெயர் த்வனிக்கிறது!!*

**सर्वोत्तरा तव दया यदि फल्गुनीयं गर्वोत्तराऽपि सुखिता मम धीश्शुभा स्यात् ।**
**धीपञ्जरे मम सदैव यथा भवान् स्यात् श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ १७**

*17.* எல்லாவற்றிற்கும் மேம்பட்ட (**सर्वोत्तरा**) உமது தயையானது இருக்குமானால் இந்த அற்பவிஷயத்தில் கர்வப்படும் எனது புத்தியானது சுபமாக அமையும். எனவே பத்மனாபரே! நீர் என்னுடைய புத்தியாகிய கூண்டில் இருக்குமாறு (வஸிக்கும்படியாக) கடாக்ஷமாலையைத் தந்து அருளல் வேண்டும். இங்கு **உத்தரா பல்குனி** - என்று இரண்டு வேறிடத்தில் உள்ள வார்த்தைகள் மூலம், **உத்திர** நக்ஷத்ரம் கூறப்படுகிறது.

**न्यस्ते भरे त्वयि मया सहसैव सर्वं हस्ते भवेदिति फलं दृढनिश्चयोऽहम् ।**
**प्रापं तवैव चरणौ शरणं शरण्यौ श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। १८**

*18.* என்னால் உம்மிடம் பரந்யாஸம் செய்யப்பட்டுவிட்டால் உடனே எல்லாப் பயன்களும் எனது **ஹஸ்தத்தில்** (கையில்) வந்துவிடும் என்று திடமாக நம்புகிறேன். அதனால் ஶரண்யமான உமது திருவடிகளை ஶரணம் அடைந்தேன். பத்மனாபா! கடாக்ஷமாலையைத் தாரும். இங்குத் தெளிவாக **ஹஸ்தம்** உள்ளது!

**अत्राखिलेश! भुवने परिचिन्त्यमाने चित्रा विभाति तव विश्वजनीनरीतिः ।**
**आपद्मजातमखिलस्य गुहाशयात्मन्! श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। १९**

*19.* அகிலேச்வரா! ப்ரஹ்மா வரையிலும் உள்ள எல்லோருடைய உள்ளத்திலும் உள்ளவரே! பத்மனாபரே! மூவுலகிலும் யோசித்துப் பார்த்தால் உம்முடைய - எல்லோரையும் ஸமமாகப் பார்க்கும் முறை, மிகவும் **விசித்ரமாக** உள்ளது. உமது கடாக்ஷமாலையைக் கொடுத்தருளும். **சித்ரா** - என்பதற்கு, **ஆஶ்சர்யம்** என்ற பொருள் இருந்தாலும், சித்ரா = **சித்திரை** என்ற நக்ஷத்ரம் ஸூசிக்கப்படுகிறது.

**स्वातीप्सितानि कुरुते त्वयि काऽपि भक्तिः नातीवचित्रमिदमप्यहितेऽत्युदारे ।**
**सापत्रपं विबुधपादपमादधानां श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। २०**

*20.* பத்மனாபரே! உம்மிடம் உயர்ந்த பக்தி இருக்குமாயின் அது உமது பக்தர்களுக்குத் தங்களால் விருப்பப்பட்டதையும் மிகவும் தாண்டி (சிந்திக்கப்படாத) பயன்களைத் தருவது என்பது ஆஶ்சர்யம் அல்ல. நீர் ஶத்ருவிடமும் மிகுந்த தாராளமான

*கருணை உள்ளவராயிற்றே. எனவே கற்பக மரத்தை லஜ்ஜைப்படுமாறு செய்யக்கூடிய உமது கடாக்ஷமாலையைத் தந்தருள வேண்டும். இங்கு* **स्वातीप्सितानि** - *என்ற வார்த்தையை* **स्व + अति + ईप्सितानि** *என்ற பிரித்துக் கொண்டால் மேற்கூறிய பொருள் வருகிறது. அதோடு* **स्वाती** - **ஸ்வாதீ** *என்ற நக்ஷத்ரம் உணர்த்தப்படுகிறது என்பது இந்த மஹாகவியின் அற்புதம்!!*

**कान्तं तवांघ्रियुगलं निगलं हृदो मे श्रान्तस्य संसृतिपथे शरणं गतस्य ।**
**श्रीमन्! विशाखमुखलेखकुलैकदेव! श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २१**

*21. ஸம்ஸாரச் சுற்றலினால் களைப்படைந்த என்னுடைய ஹ்ருதயத்திற்கு (மனதிற்கு) மனம்கவரும் உமது பாதத்தாமரை கட்டிப்போடும் சங்கிலியாக உள்ளது. லக்ஷ்மீபதே!* **விசாகனாகிய** *முருகன் போன்ற தெய்வங்களின் குலதெய்வமே! பத்மனாபரே! உமது கடாக்ஷமாலையைத் தரவேண்டும்.*

**सर्वापराधमपि तावकसंचितं ते शर्वादयोऽपि निगदन्ति तवैव भोग्यम् ।**
**आपन्न इत्यविगणय्य ममापराधान् श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २२**

*22. பத்மனாபரே! உமது விஷயத்தில் உம்மைச் சார்ந்தவனான நான் செய்த எல்லா அபராதங்களும் உமக்கு போக்யமான நிவேதனம் போன்றதே, என்று சிவன் போன்றவர்கள் கூறுகின்றனர். ஶரணாகதி பண்ணியவன் என்பதால் எனது குற்றங்களை பொருட்படுத்தாமல் உமது கடாக்ஷமாலையைத் தந்து அருள வேண்டும்.* **सर्वापराध** *என்ற சொல்லில்* **अप** *என்கிற உபஸர்கத்திற்கு கடந்து என்ற பொருள் கொண்டு, ராதா என்ற விசாகா நக்ஷத்ரத்தைக் கடந்து என்ற பொருளைக் கொள்ளலாம். அப்பொழுது அனூராதா என்கிற* **அனுஷம்** *என்ற நக்ஷத்ரம் உணர்த்தப்படுவதாக கொள்ளவேண்டும்.* ***அனுஷம்*** *என்பதை ஸம்ஸ்க்ருதத்தில்* **அனூராதா** *என்று கூறுவர்.*

**ज्येष्ठा भवन्ति गुणशीलमुखैश्च बोधे श्रेष्ठाः परे कति कतीह न वा तवेष्टाः ।**
**रूपं स्वमप्यविदुषि स्वयमेव बाले श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २३**

*23. பத்மனாபரே! உமது பக்தர்கள் (இஷ்டர்கள்) எத்தனையோ பேர்கள் வயதில் முதிர்ந்தவர்களாயும், ஜ்யேஷ்டர்களாயும், குணம், சீலம் போன்றவற்றால் ச்ரேஷ்டர்களாயும் உள்ளனர். ஆனாலும் தன்னைக்கூட அறியாத பாலனான என்னிடத்தில் (கருணை மாத்திரத்தால்) நீர் கடாக்ஷமாலையை அருளும். இந்தச் செய்யுளின் ஆரம்பத்தில் உள்ள* **ஜ்யேஷ்டா** *என்ற வார்த்தை ச்லேடையினால்* **கேட்டை** *நக்ஷத்ரத்தைக் குறிக்கின்றது.*

**शीलं न वीक्ष्य दयते हि भवान् प्रपन्ने मूल! त्वमेव शरणं मम हे भवेति ।**
**द्वैपं वचोऽपि हृदये सदयेऽह्यभूत्तत् श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २४**

*24. (ஜாதி, குலம்) ஶீலம் எதையும் பொருட்படுத்தாமல் "மூலமே" (ஆதிமூலமான பெருமாளே!) எனக்கு நீதான் ஶரணம் என்று கூறிய கஜேந்திரனான யானையின் வார்த்தை உமது தயாஸாகரமான உள்ளத்தில் இருந்ததல்லவா? (அதனால் அதனைக் காப்பாற்றினீர் அல்லவா?) எனக்கும் உமது கடாக்ஷமாலையை அருள வேண்டும், பத்மனாபா! இங்கு* **मूल = மூலம்** *என்ற நக்ஷத்ரம்* **मूल** *என்ற சொல்லினால் குறிக்கப்படுகிறது.*

**आषाढभूति**रिव पूर्वमहं महत्सु वेषान्तरेण रचितुं कपटं पटीयान् ।
हे पङ्कजाक्ष! तव दास्यसुखः कथं स्यां श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २५

*25. நான் முன்பு பெரியவர்களிடத்தில் வெளிவேஷத்தினால் நல்லவன் போல் நடிப்பதில் ஶூரனாக இருந்து,* ***ஆஷாடபூதி****யாக விளங்கினேன். ஹே! தாமரைக்கண்ணா! நான் எப்படி உமது தாஸ்யபோகத்தை அனுபவிப்பேன்? உமது கடாக்ஷமாலையை அருளும். இங்கு* **ஆஷாடபூதி** *என்ற சொல்லில்* **ஆஷாட** *என்பது* **பூராடம்** *என்ற நக்ஷத்ரத்தை ஸூசிக்கிறது.*

**आषाढमुत्तर**मुडु त्विह जन्मतारं शेषा वदन्ति परमेव तव प्रसक्तेः ।
आपादने न वितथं विदधान एतत् श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ २६

*26.* *என்னுடைய ஜன்ம நக்ஷத்ரம்* **உத்தராஷாடம்** *என்று உமது அடியார்கள் கூறுகிறார்கள். (“**உத்தர** = சிறந்த **ஆஷாடம்** = இருப்பிடம் உள்ளவன்” என்றும் பொருள் கொள்ளலாம்.) எனவே பத்மனாபா! உம்மிடம் இணைந்து வாழும் சிறப்பை அளிப்பதில் நீர் என்னை விட்டுவிடாமல் (**உத்தராஷாடம்** என்ற சொல்லைப் பொருளற்றதாகச் செய்யாமல்) இருக்கவேண்டும். உமது கடாக்ஷமாலையைத் தரவேண்டும்.*

**जातायतादमलमा**श्रवणात्** सुजातात् भीताभयप्रदरुचेः नयनांबुजातात् ।**
**आपन्नरक्षणविधौ अतिमात्रलोला श्रीपद्मनाभ! तव पातु कटाक्षमाला ।। २७**

*27.* *நன்கு மலர்ந்து விஸ்தாரமாயுள்ளதும், நிர்மலமானதும், காது (**ஶ்ரவணம்**) வரை நீண்டதும் பயந்தவர்களைக் காப்பதில் ருசி உள்ளதும் ஆன உமது தாமரைக் கண்களிலிருந்து வரும் கடாக்ஷமாலையைத் தந்து அருளல் வேண்டும்.* **ஶ்ரவணம்** *என்ற சொல்லால்* **திருவோணம்** *என்ற நக்ஷத்ரம் குறிப்பிடப்படுகிறது.*

**त्वत्कीर्तनं तव कथाश्रवणं तवार्चा सत्कीर्तिहेतुमपि सद्गतिकारणानि ।**
**के पंकमोचनचणं न विदन्ति धीराः श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। २८**

*28.* *ஹே! பத்மனாபா! உம்முடைய திருநாமத்தைக் கீர்த்தனம் செய்வது, கதையை* **ஶ்ரவணம்** *செய்வது, பூஜை பண்ணுவது என யாவும் நல்ல கீர்த்தியைத் தருவதாகவும் நல்லகதிக்குக் காரணமாகவும் இருக்கிறது என்பதையும் எம் பாபங்களாகிய சேற்றைப் போக்குவதில் நிபுணமாகவும் இருக்கிறது என்பதையும் யார் தான் அறியமாட்டார்கள்? உமது கடாக்ஷமாலையைத் தந்து அருளும்.*

*இந்த ஶ்லோகத்தாலும்* **ஶ்ரவணம்** *என்கிற நக்ஷத்ரம் கூறப்படுகிறது. பெருமாளின் நக்ஷத்ரம் ஆதலால் இதற்கு இரண்டு ஶ்லோகங்கள் போலும்!*

**युक्तात्मनोऽपि जगति त्वमबाधनिष्ठान् भक्तान् स्वयैव दययाऽभयया तनोषि ।**
**कापथ्यशीलरुचिरस्मि कथं कृती स्याम्? श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। २९**

*29.* *நீ உலகில் உன் இடத்தில் வைத்த மனதை உடைய உன் பக்தர்களை நல்ல யுக்தர்களாகவும், பாதம்* **(बाध** *= உபத்ரவம்) அற்றவர்களாகவும்* **(अबाधनिष्ठान)** *அபயப்ரதையான உன் தயையினால் செய்கிறாய். ஆனால் நானோ கெட்டவழியில் போவதில் ருசியுள்ளவனாக உள்ளேனே! எனவே எப்படி* ***தன்யனாக*** *ஆவேன்? உமது கடாக்ஷமாலையைத் தாரும் பத்மனாபா!*

*இங்கு* **தனிஷ்டா** *என்ற சொல்* **அவிட்ட** *நக்ஷத்ரத்தைக் குறிக்கிறது.*

**सन्तापकारिणि भृशं भवसंज्वरे मे चिन्ताकुलैः शतभिषग्प्रवरैः चिकित्सा ।**
**आपद्यते किमु भवन्तमृतेऽमृतेश! श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ ३०**

*30.* *மிகவும் ஸந்தாபம் கொடுக்கின்ற ஸம்ஸார ஜ்வரத்தில் உள்ள எனக்கு நூறு மருத்துவர்களால்* **(शतभिषग्प्रवरैः)** *வைத்தியம் செய்யப்பட்டாலும் சிகித்ஸை நிறைவேறுமா? எனவே அம்ருதேஶனான உம்மைவிட்டால் வேறு வழி ஏது? ஆகவே உமது கடாக்ஷமாலையைத் தந்து அருளவேண்டும். இதனாலே* **ஶதபிஷக்** *- என்ற சொல்லின் (நூறு மருத்துவர்கள்) என்ற பொருளில்* **शतभिषक्** *என்று கூறப்படும்* **ஶதயம்** *என்ற நக்ஷத்ரம் ஸூசிப்பிக்கப்படுகிறது.*

**पूर्वं यथाकथमपि स्थितिभागिनोऽपि चार्वञ्चिताक्षियुगभाद्रपदा हि ते स्युः ।**
**ये पत्रिलास्तव कदाचिदपाङ्गवर्षैः श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ ३१**

*31.* *முதலில் சுமாரான நிலையில் இருந்தவர்களானாலும், எவர்கள் உமது கடைக்கண் பார்வைக்குப் பாத்ரமாகிறார்களோ அவர்கள் மிகமிக அழகான இரு கண்கள் மற்றும் மங்களம் தரும் இடத்தை =* **(भाद्रपद)**-*ம் உடையவர்களாக ஆகிவிடுகிறார்கள். ஹே! பத்மனாபா! உமது கடாக்ஷமாலையைத் தரவேண்டும். இங்கு* **भाद्रपदा** *என்ற சொல்லினால் மங்களகரமான பாதங்கள் என்ற பொருள் அறியப்பட்டாலும்* **பூரட்டாதி** ***(भाद्रपद)*** *என்ற நக்ஷத்ரமும் குறிப்பிடப்படுகிறது.*

**आर्द्रापराधशतमूलमहो नरास्त्वदाद्यं तरंगिततरंगमपाङ्गसङ्गम् ।**
**प्रापप्य देहमथ भाद्रपदोत्तरास्ते श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ॥ ३२**

*32.* பச்சையான பலபல அபராதங்களின் மூலம் கஷ்டப்படும் உடலைப் பெற்ற மனிதர்கள் கூட, மிகச் சிறந்த உமது கடைக்கண் பார்வையின் அலைகளுடன் தமது உடலுக்குச் சேர்க்கையைப் பெறுவித்தார்கள் ஆகில் மிகச் சிறந்த (பத்ரமான) பதங்களை (பதவிகளை) அடைகிறார்கள்! எனவே உமது கடாக்ஷமாலையைத் தந்து அருளவேண்டும். இங்கு **भाद्रपदोत्तराः** என்ற வார்த்தையினால் ***பாத்ரபதா உத்தரா*** என்கிற **உத்தரட்டாதி** நக்ஷத்ரம் குறிப்பிடப்படுகிறது.

**घोरे**ऽ**वतीह** खलु को भवदाववह्नौ दूरे त्वदेकशरणं च नितान्ततान्तम् ।
श्रीप! क्षमो जनमिमं त्वदृते दयालो श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। ३३

*33.* ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயில் சிக்கித்தவிக்கும், (ஆனாலும்) உம்மையே சரணமடைந்தவனுமான, மிகவும் நலிந்த அடியேனை தயாளுவான உம்மைத் தவிர வேறு யார் காப்பாற்ற முடியும்? எனவே உமது கடாக்ஷமாலையைத் தாரும். இனி **घोरे**ऽ**वतीह** என்கிற தொடரில் **घोरे+अवति+इह** = என்பதாக மூன்று பகுதிகள் உள்ளன. இவைகளில் முதல் பாகத்தில் உள்ளரே **रे** என்பதோடு **अवति+इह** என்பதான இரண்டாம் பகுதியும் மூன்றாம் பகுதியில் **इ** என்கிற எழுத்தையும் சேர்த்து **रेवती ரேவதீ** நக்ஷத்ரம் ஸூசிக்கப்பட்டதாக ஆகிறது.

आशास्तथैव बहुशोऽनुभवन्ति सर्वाः आशा**स्तथाभिजित**वैरिगणा भजन्ति ।
ये पद्मशोभि तव पादयुगं नतास्ते श्रीपद्मनाभ! तव देहि कटाक्षमालाम् ।। ३४

*34.* எல்லாவிதமான ஆசைகளும் நிறைவேறப்பெற்று, எல்லா திசைகளிலும் உள்ள எல்லாவிதமான பொருள்களையும், உனது தாமரை போன்ற திருவடியினை வணங்கும் பக்தர்கள் அனுபவிக்கிறார்கள். இதற்குத் தடங்கல் ஆன விரோதிகளையும் வென்று விடுகிறார்கள். இதற்குக் காரணம் உம்மைத் தவிர வேறு யார் இருக்க முடியும்? உமது கடாக்ஷமாலையைத் தந்து அருளல் வேண்டும்.

இந்த ஶ்லோகத்தில் உள்ள **அபிஜித** என்ற தொடரில் **அபிஜித்** என்கிற நக்ஷத்ரம் குறிப்பிடப்படுகிறது.

**पद्मावलीयमखिलेश! तव प्रसक्त्यै हृद्या भवत्विति समर्पयते विनम्रः ।**
**श्रीपद्मजाब्जकरलालितपादपद्म! श्रीपद्मनाभ! तव वेंकटशेषदासः ।।** **३५**

*35. ஹே! பத்மநாபா! அனைத்துலகுக்கும் தலைவனே! லக்ஷ்மீயின் கரகமலங்களால் ஸேவிக்கப்பட்ட (லாலனம் பண்ணப்பட்டப்) பாதத்தாமரைகளை உடையவனே! உம்முடைய வேங்கடஶேஷ தாஸன் உம்முடைய ஸன்னிதியில் (உம்மை உகப்பிப்பதின் பொருட்டு) இந்த மனோஜ்ஞமான பத்யாவளீ (செய்யுள்களின் மாலை)யை ஸமர்ப்பிக்கிறான்.*

**।। इति श्रीपद्मनाभकटाक्षनक्षत्रमाला समाप्ता ।।**

**ஸ்ரீபத்மனாப கடாக்ஷநக்ஷத்ரமாலை நிறைவடைந்தது.**

★ ★ ★

**वन्दे वेंकटशेषार्यं वात्सल्यगुणवारिधिम् ।**
**वात्स्यश्रीवरदाचार्यतनयं करुणानिधिम् ।।**

**।। श्रीमते वेंकटशेषार्यमहादेशिकाय नमः ।।**

| திருவாய்மொழிப் பாவகையும் ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தமும் | | | | |
|---|---|---|---|---|
| **பத்து** | **பா. எண்** | **திருவாய்மொழி** | **திருவாய்மொழிப் பாவகை** | **ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தம்** |
| **1** | 1 | உயர்வற | கலிவிருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 1 | 2 | வீடுமின் | வஞ்சித் துறை | அநுஷ்டுப் |
| 1 | 3 | பத்துடை | கலி நிலைத் துறை | ஸ்ரக்தரா |
| 1 | 4 | அஞ்சிறைய | கொச்சகக் கலிப்பா | மந்தாக்ராந்தா |
| 1 | 5 | வளவேழ் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 1 | 6 | பரிவதில் | வஞ்சி விருத்தம் | உபஜாதி |
| 1 | 7 | பிறவித்துயர் | கலி விருத்தம் | வஸந்ததிலகா |
| 1 | 8 | ஓடும்புள் | வஞ்சித் துறை | அநுஷ்டுப் |
| 1 | 9 | இவையும் அவையும் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 1 | 10 | பொருமா நீள்படை | கலி விருத்தம் | வஸந்ததிலகா |
| **2** | 1 | வாயும் திரை | கொச்சகக் கலிப்பா | மந்தாக்ராந்தா |
| 2 | 2 | திண்ணன் வீடு | கலி விருத்தம் | புஜங்கப்ரயாதம் |
| 2 | 3 | ஊனில் வாழ் | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 2 | 4 | ஆடியாடி | வஞ்சி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 2 | 5 | அந்தாமத்தன்பு | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 2 | 6 | வைகுந்தா | ஆசிரியத் துறை | ஸ்ரக்தரா |
| 2 | 7 | கேசவன் தமர் | கலித் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 2 | 8 | அணைவது | கலி விருத்தம் | மாலினீ |
| 2 | 9 | எம்மா வீடு | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 2 | 10 | கிளரொளி இளமை | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| **3** | 1 | முடிச்சோதி | நாலடித் தாழிசை | ஶார்தூலவிக்ரீடிதம் |

| பத்து | பா. எண் | திருவாய்மொழி | திருவாய்மொழிப் பாவகை | ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தம் |
|---|---|---|---|---|
| 3 | 2 | முந்நீர் ஞாலம் | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 3 | 3 | ஒழிவில் காலம் | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 3 | 4 | புகழும் | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 3 | 5 | மொய்மாம் பூம்பொழில் | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 3 | 6 | செய்ய தாமரை | எழுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 3 | 7 | பயிலும் சுடரொளி | கலித் துறை | கலஹம்ஸீ |
| 3 | 8 | முடியானே | கலி விருத்தம் | இந்த்ரவதனா |
| 3 | 9 | சொன்னால் | கலித் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 3 | 10 | சன்மம் பலபல | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| **4** | 1 | ஒருநாயகம் | கலித் துறை | மந்தாக்ராந்தா |
| 4 | 2 | பாலனாய் | கலி விருத்தம் | ப்ருத்வீ |
| 4 | 3 | கோவை வாயாள் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 4 | 4 | மண்ணை இருந்து | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 4 | 5 | வீற்றிருந்து | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 4 | 6 | தீர்ப்பாரை | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 4 | 7 | சீலமில்லா | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ப்ருத்வீ |
| 4 | 8 | ஏறாளும் | கொச்சகக் கலிப்பா | விபுதப்ரியா |
| 4 | 9 | நண்ணாதார் | கொச்சகக் கலிப்பா | ஶார்தூலவிக்ரீடிதம் |

| பத்து | பா. எண் | திருவாய்மொழி | திருவாய்மொழிப் பாவகை | ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தம் |
|---|---|---|---|---|
| 4 | 10 | ஒன்றும் தேவும் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| **5** | 1 | கையார் சக்கரம் | கலித் துறை | ப்ருத்வீ |
| 5 | 2 | பொலிக பொலிக | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 5 | 3 | மாசறு சோதி | கலித் துறை | ப்ருத்வீ |
| 5 | 4 | ஊரெல்லாம் | கொச்சகக் கலிப்பா | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 5 | 5 | எங்ஙனேயோ | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 5 | 6 | கடல்ஞாலம் | எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | மணிமாலா |
| 5 | 7 | நோற்ற நோன்பு | ஆசிரியத் துறை | ஸ்ரக்தரா |
| 5 | 8 | ஆராவமுதே | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 5 | 9 | மானேய் நோக்கு | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| 5 | 10 | பிறந்தவாறும் | ஆசிரியத் துறை | ஸ்ரக்தரா |
| **6** | 1 | வைகல் பூங்கழி | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 6 | 2 | மின்னிடை | ஆசிரியத் துறை | ஸ்ரக்தரா |
| 6 | 3 | நல்குரவும் | கலி நிலைத் துறை | ஸ்ரக்தரா |
| 6 | 4 | குரவையாய்ச்சியர் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 6 | 5 | துவளில் மணிமாடம் | எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 6 | 6 | மாலுக்கு | கலி விருத்தம் | உபஜாதி |
| 6 | 7 | உண்ணும் சோறு | கலி நிலைத் துறை | ஸ்ரக்தரா |
| 6 | 8 | பொன்னுலகு | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |

| பத்து | பா. எண் | திருவாய்மொழி | திருவாய்மொழிப் பாவகை | ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தம் |
|---|---|---|---|---|
| 6 | 9 | நீராய் | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 6 | 10 | உலகமுண்ட | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| **7** | 1 | உண்ணிலாவிய | ஆசிரியத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 7 | 2 | கங்குலும் பகலும் | எண்சீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 7 | 3 | வெள்ளைச் சுரிசங்கு | எண்சீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 7 | 4 | ஆழி எழ | கலி விருத்தம் | ஸ்ரக்தரா |
| 7 | 5 | கற்பார் | கலித் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 7 | 6 | பாமரு மூவுலகும் | கலித் துறை | மந்தாக்ராந்தா |
| 7 | 7 | ஏழையராவி | கலித் துறை | ஸ்ரக்தரா |
| 7 | 8 | மாயா வாமனனே | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| 7 | 9 | என்றைக்கும் | கலி விருத்தம் | ப்ருத்வீ |
| 7 | 10 | இன்பம் பயக்க | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| **8** | 1 | தேவிமார் | எழுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 8 | 2 | நங்கள் வரிவளை | எண்சீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 8 | 3 | அங்கும் இங்கும் | கலித் துறை | வஸந்ததிலகா |
| 8 | 4 | வார்கடா அருவி | எழுசீர் ஆசிரிய விருத்தம் | மத்தேப |
| 8 | 5 | மாயக் கூத்தா | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 8 | 6 | எல்லியும் காலை | கலி விருத்தம் | உபஜாதி |
| 8 | 7 | இருத்தும் | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| 8 | 8 | கண்கள் சிவந்து | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 8 | 9 | கருமாணிக்க | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 8 | 10 | நெடுமாற்கடிமை | அறுசீர் ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |

| பத்து | பா. எண் | திருவாய்மொழி | திருவாய்மொழிப் பாவகை | ப்ரதிபிம்பலஹரீ வ்ருத்தம் |
|---|---|---|---|---|
| **9** | 1 | கொண்டபெண்டிர் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 9 | 2 | பண்டை நாளாலே | எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 9 | 3 | ஓராயிரமாய் | கலி விருத்தம் | வஸந்ததிலகா |
| 9 | 4 | மையார் கருங்கண்ணி | கலி விருத்தம் | உபஜாதி |
| 9 | 5 | இன்னுயிர்ச் சேவலும் | கலி நிலைத் துறை | ஸ்ரக்தரா |
| 9 | 6 | உருகுமால் நெஞ்சம் | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| 9 | 7 | எங்கானால் அகங்கழிவாய் | கொச்சகக் கலிப்பா | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 9 | 8 | அறுக்கும் வினை | கலி விருத்தம் | உபஜாதி |
| 9 | 9 | மல்லிகை கமழ் | எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | மந்தாக்ராந்தா (யுகநிபத்தா) |
| 9 | 10 | மாலை நண்ணி | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| **10** | 1 | தாள தாமரை | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 10 | 2 | கெடுமிடர் | கலி விருத்தம் | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 10 | 3 | வேய்மரு தோளினை | எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | உத்க்ருதிவிசேஷ: (ப்ரஹர்ஷிணீ-யுகரூப:) |
| 10 | 4 | சார்வே | கலி விருத்தம் | வஸந்ததிலகா |
| 10 | 5 | கண்ணன் கழலிணை | வஞ்சித் துறை | அநுஷ்டுப் |
| 10 | 6 | அருள்பெறுவார் | கொச்சகக் கலிப்பா | ஶார்தூலவிக்ரீடிதம் |
| 10 | 7 | செஞ்சொற்கவிகாள் | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | ஸ்ரக்தரா |
| 10 | 8 | திருமாலிருஞ்சோலை | கலி விருத்தம் | வஸந்ததிலகா |
| 10 | 9 | சூழ்விசும்பு | கலி விருத்தம் | மந்தாக்ராந்தா |
| 10 | 10 | முனியே! நான்முகனே! | கலி நிலைத் துறை | ஶார்தூலவிக்ரீடிதம் |
| | | | | |

| இதன் சுருக்கு:– திருவாய்மொழியில் கையாளப்பட்ட பாவகைகள் | | |
|---|---|---|
| **வரிசை எண்** | **பாவகை** | **பாசுர எண்ணிக்கை** |
| 1. | வஞ்சித்துறை | 33 |
| 2. | கலி விருத்தம் | 319 |
| 3. | எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | 33 |
| 4. | வஞ்சி விருத்தம் | 22 |
| 5. | கலித் துறை | 112 |
| 6. | அறுசீர் ஆசிரிய விருத்தம் | 99 |
| 7. | அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | 121 |
| 8. | ஆசிரியத் துறை | 55 |
| 9. | எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் | 22 |
| 10. | கலி நிலைத் துறை | 132 |
| 11. | கொச்சகக் கலிப்பா | 77 |
| 12. | நாலடித் தாழிசை | 11 |
| 13. | எண்சீர் ஆசிரிய விருத்தம் | 33 |
| 14. | எழுசீர் ஆசிரிய விருத்தம் | 33 |
| | **மொத்தம்** | **1102** |

| ப்ரதிபிம்பலஹரீயில் கையாளப்பட்ட வ்ருத்தங்கள் | | |
|---|---|---|
| **வரிசை எண்** | **வ்ருத்தம்** | **ஶ்லோகங்களின் எண்ணிக்கை** |
| 1. | அனுஷ்டுப் | 33 |
| 2. | இந்த்ரவதனா | 11 |
| 3. | உத்க்ருதிவிசேஷ: (ப்ரஹர்ஷிணீ-யுகரூப:) | 11 |
| 4. | உபஜாதி | 55 |
| 5. | கலஹம்ஸீ | 11 |
| 6. | ஶார்தூலவிக்ரீடிதம் | 409 |
| 7. | புஜங்கப்ரயாதம் | 11 |
| 8. | ப்ருத்வீ | 55 |
| 9. | மணிமாலா | 11 |
| 10. | மத்தேப | 11 |
| 11. | மந்தாக்ராந்தா | 110 |
| 12. | மந்தாக்ராந்தா (யுகநிபத்தா) | 11 |
| 13. | மாலினீ | 11 |
| 14. | வஸந்ததிலகா | 66 |
| 15. | விபுதப்ரியா | 11 |
| 16. | ஸ்ரக்தரா | 275 |
| | **மொத்தம்** | **1102** |

|| श्रीः ||

|| श्रीमते रामानुजाय नमः ||

# ஸங்கதிமணிமாலா –
# பாவகை(வ்ருத்தங்)களின்
# அட்டவணை

| வரிசை எண் | திருவாய்மொழியில் பத்து | பாவகை [வ்ருத்தம் ] | ஶ்லோகங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | *முன்னுரை* | *உபஜாதி* | 1 |
| 2. | *முதல் பத்து* | *உபஜாதி* | 10 |
| 3. | *இரண்டாம் பத்து* | *மாலினீ* | 10 |
| 4. | *மூன்றாம் பத்து* | *ப்ரபத்ரகம்* | 10 |
| 5. | *நான்காம் பத்து* | *உபமாலினீ* | 10 |
| 6. | *ஐந்தாம் பத்து* | *மாலினீ* | 10 |
| 7. | *ஆறாம் பத்து* | *மாலா* | 10 |
| 8. | *ஏழாம் பத்து* | *மாலினீ* | 10 |
| 9. | *எட்டாம் பத்து* | *வஸந்ததிலகா* | 10 |
| 10. | *ஒன்பதாம் பத்து* | *மாலினீ* | 10 |
| 11. | *பத்தாம் பத்து* | *வஸந்ததிலகா* | 10 |
| | | **மொத்தம்** | **101** |

| வ்ருத்த வகைப்படி இதன் சுருக்கு | | |
|---|---|---|
| **வரிசை எண்** | **வ்ருத்தங்கள்** | **ஶ்லோகங்கள்** |
| 1. | *உபஜாதி* | 11 |
| 2. | *வஸந்ததிலகா* | 20 |
| 3. | *மாலினீ* | 40 |
| 4. | *உபமாலினீ* | 10 |
| 5. | *ப்ரபத்ரகம்* | 10 |
| 6. | *மாலா* | 10 |
| | **மொத்தம்** | **101** |

| ஶ்ரீபத்மநாபகடாக்ஷநக்ஷத்ரமாலா பாவகை(வ்ருத்தங்)களின் அட்டவணை | | | |
|---|---|---|---|
| **வரிசை எண்** | **ஶ்லோக எண்** | **வ்ருத்தம்** | **எண்ணிக்கை** |
| 1. | 1 | *கீதி* | 1 |
| 2. | 2 | *அனுஷ்டுப்* | 1 |
| 3. | 3 *முதல்* 35 *வரை* | *வஸந்ததிலகா* | 33 |
| | | **மொத்தம்** | **35** |



ஸ்ரீ விஜயலக்ஷ்மீ ஸமேத ஸ்ரீ சக்ரபாணிப் பெருமாள்
திருக்குடந்தை (கும்பகோணம்)



ஸ்ரீ காட்கரையப்பன் - திருக்காட்கரை



ஸ்ரீ திருமூழிக்களத்தான் - திருமூழிக்களம்



ஸ்ரீ நாராயணன் - திருநாவாய்



ஸ்ரீ சௌரிராஜன் - திருக்கண்ணபுரம்

